# துளசிதாசர் இராமாயணத்தில் சிலநயங்கள்

(முதற் பாகம்)

(வெளியீடு: நெல்லை மாவட்டக் கம்பன் கழகம் - பாளை)



ஆசிரியர்:

T. அய்யாச்சாமி, பி. ஏ., பி. எல்.,

துணைத்தலைவர்,

நெல்லை மாவட்டக் கம்பன் கழகம்,

பாளையங்கோட்டை.

# நெல்லை மாவட்டக் கம்பன் கழகம்

பாளையங்கோட்டை

---

| | |
|---|---|
| புரவலர்: | திரு. எம். எஸ். சுந்தரம் பிள்ளை<br>பாளை. |
| தலைவர்: | ,, K. S. கிருஷ்ண ஐயங்கார்<br>M. A. |
| துணைத்தலைவர்: | ,, T. அய்யாச்சாமி B. A., B. L. |
| செயலாளர்: | ,, M. சுப்பிரமணியம் |
| இணைச்செயலாளர்: | ,, S. ஹரிஹரன் |
| பொருளாளர்: | ,, R முருகையா B. A. |

# துளசிதாசர் இராமாயணத்தில் சிலநயங்கள்

(முதற் பாகம்)

ஆசிரியர்:

T. அய்யாச்சாமி, பி. ஏ., பி. எல்.,

பாளையங்கோட்டை,

வெளியீடு:

நெல்லை மாவட்டக் கம்பன் கழகம்,

பாளையங்கோட்டை.

# பொருளடக்கம்

---




# முன்னுரை

பாரத நாட்டிற்கு இராமாயணம் என்ற பெருங் காப்பியம், சிறந்த கலைக் கருவூலம். இந்தக் கதையை முக்கியமாக நம் நாட்டில், மூன்று பெருமக்கள் மூன்று வெவ்வேறு காலங்களில், வெவ்வேறு மொழிகளில் வழங்கி யிருக்கிறார்கள்.

வான்மீகி மகரிஷி மூல காவியமாக, ஆயிரமாயிரம் ஆண்டுகளுக்கு முன் வடமொழியில் இராமாயணத்தை '24' ஆயிரம் சுலோகங்களில் பாடியுள்ளார். சுமார் ஒன்பதாம் நூற்றுண்டில், கவிச் சக்கரவர்த்தி கம்பர், தேனினும் இனிய தீந்தமிழில் சுமார் '12' ஆயிரம் செய்யுட்களால் இராமாயணத்தை இயற்றியுள்ளார்.

தமிழ் நாட்டில் கம்பராமாயணம் நன்ருகப் பரவி, கற்றவர்கள் மத்தியில் மட்டுமல்லாமல், பிறர் மத்தியிலும் தற்காலத்தில் மிக்க புகழோடு வழங்கி வருகிறது. வான்மீகி இராமாயணமோ ஓரளவு கற்றவர்கள் மத்தியில்

மட்டுமே அறியப்பட்டுப் புகழோடு பேசப்படுகிறது. ஆனால் துளசிதாசரது மானஸ இராமாயணம் இதுவரை தமிழர்கள் மத்தியில் பெயரளவில் கூட இடம்பெறவில்லை.

வடமொழிப் புலமை மிக்க பெரியவர்களையும், தமிழ்ப் புலவர்களையும் சந்தித்து உரையாடிய போது துளசிதாசரின் பக்திக் கருத்துக்கள், தமிழகத்தில் வழங்காதிருத்தல் பெரிய குறை என்றும், அவைகள் நம்மிடையே இடம் பெற வேண்டுமென்றும் உணர்ந்தேன்.

வட நாட்டு மொழியாகிய ஹிந்தியில் எழுதப் பட்டுள்ள துளசிதாசரது மானஸ இராமாயணத்தை நேரில் படித்துணரும் அறிவில்லாவிட்டாலும், நெல்லை மாவட்டக் கம்பன் கழகத்தில் கிடைத்த “திரு. எஸ். ஜெகநாதன்” அவர்கள் மொழி பெயர்ப்புச் செய்திருக்கும் மானஸ இராமாயணத்தின் ஏழு சோபனங்களையும் படித்துத் தெரிந்து கொண்ட சில புதிய சிந்தனைகளை, நம் தமிழ் மககளோடு பகிர்ந்து கொள்ளும் ஆசையில் இந்தச் சிறிய நூலை எழுதுகிறேன்.

வான்மீகி இராமாயணத்திலும், கம்ப ராமாயணத்திலும் இடம் பெருதனவும், அவற்றுள் இலைமறை காய் போல குறிப்பிடப்படுவனவுமாகிய சில கதைகள் துளசிதாசரின் மானஸ இராமாயணத்தில் வெளிப்படையாகப் பக்திச் சுவை நனி சொட்டச் சொட்ட அமுதமாகவே அடியேன் உள்ளத்தில் தோன்றின. அவற்றை என்னால் இயன்ற அளவுக்கு எளிமையும் இனிமையும் பொருந்த அமைக்கலானேன்.

இந்த நூலுக்கு ஏதேனும் சிறப்பு இருந்தால், அது முற்றிலும் நெல்லை மாவட்டக் கம்பன் கழகத்துக்கே உரியதாகும். ஏனெனில், பாளையங்கோட்டை கம்ப ராமாயண எழில் மண்டபத்தில், கம்பன் கழகத்தார் நடத்தும் நூல் நிலையத்தில் குவிந்து கிடக்கும் வடமொழி இராமாயணக் கதைகளின் தமிழ் மொழி பெயர்ப்புகளும், கம்பன் காவியத்திற்குப் பல புலவர்கள் எழுதிய அரிய உரைகளும், கோஸ்வாமி துளசிதாசர் இராமாயணத்தின் தமிழ் மொழி பெயர்ப்புகளும், அடியேனுக்குப் பெரிதும் உதவி செய்தன. மேலும் இக் கம்பன் கழகம்; ஞாயிறு தோறும் நடத்தும் சத் சங்கத்தில் மும் மொழி இராமாயணத்தில் ஊறித் திளைத்த புலவர்களோடு என்னை ஒரு பொருட்டாக வைத்துக் கலந்துரையாடச் செய்து என்னை ஊக்குவித்தது.

இவற்றிற் கெல்லாம் காரணமாக இருப்பவர், கம்பன் கழகப் புரவலர் திரு. எம். எஸ். சுந்தரம் அவர்கள், அன்புக்குரிய அப்பெருந்தகைக்கு, எனது மனமார்ந்த நன்றி.

''துளசி வளாகம்''<br>
1 - ஹைகிரவுண்டு சாலை<br>
பாளையங்கோட்டை,<br>
3—1—1983.

இவண்,<br>
தூ. அய்யாசாமி,

உ

ஸ்ரீ ராமஜெயம்

# அணிந்துரை

---

உயர்திரு ஐயா அவர்களுக்கு,

எம். எஸ். சுந்தரம் பிள்ளை எழுதுவது, தங்களுடைய துளசி ராமாயணத்தின் கட்டுரைகளைப் படித்தேன். இருபது தலைப்புகளில் துளசியின் உயர்ந்த கருத்துக்களை நல்ல முறையில் வாசகர்களுக்கும், ராம பக்தர்களுக்கும் தாங்கள் எடுத்து வழங்கியிருப்பது போற்றத்தக்கது. எளிய தமிழ் நடை, ஏற்றமிகு சொல்லாட்சி, பொருள் பொதிந்த கருத்துக்கள், பக்தி நயமான வாசகங்கள், படிப்பவர்களுடைய மனதில் தன்னையறியாத ஒரு நிறைவையும், ஸ்ரீ ராமபிரானையே நேரில் தரிசிப்பது போன்ற ஒரு பக்தி உணர்வையும் கொடுக்கிறது. கட்டுரைகள் அனைத்தும் எனக்குப் பரம திருப்தி.

பாளை - நம் கம்பன் கழகத்தில் வாராந்திர கலந்துரையாடல் நிகழ்ச்சியில் 'வால்மீகி, கம்பன், துளசி ஒரு ஒப்பீடு' என்ற தலைப்பில் துளசியாகப்பேசி வந்த நீங்கள் துளசிக்குத் தொண்டனாகவே உங்களை அர்ப்பணித்துக் கொண்டு தங்கள் இல்லத்துக்கும் அந்தத் திருநாமத்தைச் சூட்டியும், ஸ்ரீ ராம நாமத்தின் மகிமையை நீங்கள் உணர்ந்தும், அனுபவித்தும், மக்களையும் உணர்த்தத் தட்டி எழுப்பும் வகையில் இந்தப் புத்தகத்தை எழுதியிருக்கிறீர்கள் என்பது அடியேனுடைய கருத்து.

ராமராஜ்யத்தின் அமைப்பையும் அங்கு வாழ்ந்த மக்களின் மனோ நிலையையும், நோயற்ற வாழ்க்கையையும், ஜாதி, மத வேறுபாடு இல்லாத சமுதாயத்தையும் தாங்கள்

சித்தரித்திருப்பது மனித குலத்தை வாழவைக்க வழி சொன்ன நம் தேசப்பிதா மகாத்மா காந்தி அவர்களுடைய எண்ணங்களையும், போதனைகளையும் பிரதிபலிப்பது போன்று இருக்கிறது.

ஸ்ரீ துளசிதாசர், காலத்தால் கம்பருக்குப் பிற்பட்டவர் என்றும் ராமகாதையை எழுதுவதற்கு முன் ஸ்ரீ துளசிதாசர் திவ்ய தேச யாத்திரையாக ராமேஸ்வரம் வந்ததாகவும், அங்கு கம்பராமாயணத்தைக் கேட்கும் பாக்கியம் பெற்றதாகவும், கம்பன் காவியத்தின் நயங்களை ஸ்ரீ துளசிதாசர் சில இடங்களில் கையாண்டு இருப்பதாகவும், தங்கள் கட்டுரையில் காட்டியிருப்பது கம்பன் காவியத்தில் ஸ்ரீ துளசிதாசர் கொண்டுள்ள ஈடுபாட்டையும், என்னைப் போன்ற கம்பன் ரசிகர்களுக்கு உற்சாகத்தையும், மன நிறைவையும் கொடுக்கிறது.

ஸ்ரீ ராம பக்தர்கள் ஒவ்வொருவர் இல்லத்திலும் பூஜை அறையில் இருக்க வேண்டிய புத்தகங்களில் இதுவும் ஒன்று. குறிப்பாகக் குடும்பப் பெண்களுக்கு இப்புத்தகம் ஒரு வரப்பிரசாதம். தங்களுடைய முயற்சி வெற்றி பெற எனது வாழ்த்துக்கள். எல்லாம் ஸ்ரீ ராமன் செயல்.

அன்பன்,

பாளை, 4—12—82

M. S. சுந்தரம் பிள்ளை,
புரவலர் - கம்பன் கழகம் - பாளை.

பெறுநர்:-

திரு. அய்யாச்சாமி அவர்கள்,
'துளசி வாசம்' - பாளை.

ஸ்ரீ

# துளசிதாசரின் வாழ்க்கைச் சுருக்கம்

துளசிதாசர் பழங்காலப் புலவர்களைப் போன்று தன்னைப் பற்றிய எந்தச் செய்தியையும் தன் நூல்களில் கூறவில்லை. எனவே தெரிந்த பிற ஆதாரங்களிலிருந்து, அவர் பிரயாகைக்கு அருகாமையிலுள்ள பாந்தா மாவட்டம் ராஜாப்பூர் கிராமத்தில், ஆத்மராமடுபேக் என்பவருக்கும் ஹுலசி என்ற அம்மையாருக்கும் 1554இல் பிறந்தார் என்று அறிகிறோம். இளமையிலேயே இவர் மிகவும் ஏழ்மை யான நிலையில் பெற்றோரை இழந்து, பிறர் உதவியில் வாழ்ந்து, வால்மீகி இராமாயணத்தை மக்களுக்குக் கதை யாகச் சொல்லி அதன் பலனாகத் தனது வாழ்க்கையை நடத்தி வந்ததாகத் தெரிகிறது.

துளசிதாசர் இரத்தினாவளி என்ற பெண்ணை மணந்தார். அவ்வம்மையார், மிகுந்த இராம பக்தியும், பண்பும், அறிவும் பெற்ற குணசீலியாக இருந்தார். ஒரு சமயம் அவ்வம்மையார் பெற்றோர் வீட்டிற்குப் போயிருந் தார். காசியில் தனியாக இருந்த துளசி, மனைவியின் மீது அளவற்ற எண்ணம் கொண்டு ஒரு நாள் பெருமழை பெய்யும் நள்ளிரவில் கடுவழி நடந்து மனைவியை வந்தடைந்தார். எதிர்பாராது திடுக்கிட்டுச் சந்தித்த பரமபக்தை, தன் கணவன் செயலைக் கடிந்து எலும்பும் சதையுமான இந்த சரீரத்தை விரும்பி இந்த நள்ளிருளில் கங்கையைக் கடந்து இவ்வளவு சிரமப்பட்டு உயிர்த் தியாகம் செய்து இப்படி வந்து கோரமாக நிற்கிறீர்களே இந்த மோகத்திலும் தியாகத்திலுக் கடுகளவு அந்தப் பரந்தாமன் ஸ்ரீ ராமச்சந்திரன் மீது பக்தி வைத்திருந்தால் இந்த சாகரத்தையே தாண்டி விடலாமே என்று வெகுண்டு

கூறினாள். இவ்வறிவுரை, துளசியின் சிந்தையைத் தூண்டி மோகத்தை விட்டு மோனத்தை நாடச் செய்தது உடனே வீட்டை விட்டகன்றார். இல்லறத்தைத் துறந்தார். ஹரிநாமத்தை மூல மந்திரமாகக் கொண்டு 14 ஆண்டுகள் நாடெங்கும் அலைந்தார்.

பின்பு வால்மீகி இராமாயணத்தை ஊர் ஊராகச் சென்று சொற்பொழிவாற்றினார். ஆஞ்சநேயர் ஒரு குஷ்டரோகியாக வந்து நாள்தோறும் அவர் கூறும் இராம கதையாகிய அமுதத்தைப் பருகி வந்தார். ஒருநாள் அனுமார் துளசிக்குக் காட்சி கொடுத்து, அவரை மகிழ் வித்ததோடு இராம லட்சுமணர்கள் வில்லேந்திய வண்ணம் குதிரையில் வரும் காட்சியைத் தரிசிக்கும் வாய்ப்பினையும் செய்து கொடுத்தார்.

இமயத்திலிருக்கும் மானஸரோவரின் அருகில் மிக அருமையான பக்திச் சூழ்நிலையில், தான் அனுபவித்துப் பெற்ற இராம மகிமையின் இன்பத்தை இவ்வையகமும் பருகும் பொருட்டு, "மானஸம்" என்ற பெயரில் கி. பி. 1631இல் அயோத்தி நகரத்தில் தொடங்கி இரண்டு ஆண்டு ஏழு மாதம் இருபத்தாறு நாட்களாக எழுதி காசியில் விசுவநாதர் ஆலயத்தில் அரங்கேற்றம் செய்தார். இவர் மானஸரோவரில் காகப்புசுண்டியையும், பிரயாகை யில் பாரத்வாசரையும், யக்ஞவல்கியர், வால்மீகி, சங்கரர் போன்ற மகா முனிவர்களையும் மானசீகமாகச் சந்தித்த தாகக் கூறப்படுகிறது. இவர் "ராம் ராம்" என்று செபித் துக்கொண்டிருக்கும் போது தனது 126ஆம் வயதில் மரண மடைந்தார். அவர் வசித்து வந்த வீடு பாதுகாக்கப்பட்டு வருகிறது. இவரது இராமாயணம் வட இந்தியாவில் மிகவும் பிரபலமடைந்து, ஒவ்வொரு வீட்டிலும் பக்திக் கருவூலமாகப் பாடப்பட்டு வருகிறது.

# இராமாவதாரத்துக்குக் காரணமான கதைகள்

---

## 1. ஸ்வாயம்புமனு சதருபை ஆகியோரின் தவம்

ஸ்வாயம்புமனு என்ற முனிவர், அவர் பத்தினி சதருபை போன்ற மகானுபாவர்களால்தான் உத்தமமான மனித சிருஷ்டி அயோத்தியில் நடத்திக் காட்டப்பட்டது.

ஸ்வாயம்புமனுவும் சதருபையும் நெடுநாள் வாழ்ந்து தருமத்தையும், நீதியையும் கைக்கொண்டு பகவான் ஆணைப்படி இராஜ்யத்தை மிக நெடுங்காலம் ஆண்டு வந்தனர். மனு தம்பதிகள் முதுமை அடைந்தபோது ஆட்சியில் வெறுப்புற்று ஹரி பக்தியின்றி வாழ்க்கையை ஈடேற்ற முடியாது என்று கண்டனர். முடிவில் தங்கள் ஜென்மம் கடைத்தேறும் பொருட்டு ஆட்சியைத் தம் மக்களிடம் ஒப்படைத்துவிட்டு தூய்மையானதும், சாதகர்களுக்குச் சித்தியைக் கொடுக்கக் கூடியதுமான வனதீர்த்தமாகிற “நைமிசாரண்யம்” அடைந்தார்கள். ஞானமும் பக்தியும் சரீரம் எடுத்தாற்போல் தவமார்க்கத்தில் வாழ்ந்தார்கள். அவர்களைக் காண அங்கு பல முனிவர்களும்’ இராஜரிஷிகளும் மக்களும் வந்தனர். தம்பதியர் மரவுரி தரித்து முதுமையிலும் நெடுங்காலம் தவவாழ்க்கை நடத்தியமையால் மெலிந்து துர்பலம் ஆகி ஹரிபக்தியில் தங்களை முற்றிலும் அர்ப்பணித்து விட்டார்கள். காய்கனி சாப்பிடுவதையும் நிறுத்தி ஜலத்தை மட்டும் சாப்பிட்டு அதன் பலத்தில் காலத்தைக் கழித்தனர். அவர்களின் ஒரே ஆசை அநாதிகாலமாக இருக்கும் பரவஸ்துவான ஹரியை எப்படியாவது நேரில் காண்பது என்பதுதான். சில ஆயிரம் ஆண்டுகள் காற்று ஒன்றையே புசித்துக்

கடுந்தவமிருந்தனர். மீண்டும் பல ஆயிரம் ஆண்டுகள் காற்றையும் விட்டொழித்து ஒற்றைக் காலினுல் அபார மான தவம் செய்தார்கள். இதைக் கண்டு சிவன், பிரம்மா, விஷ்ணு ஆகிய மூவரும் நேரில் தோன்றி பலவித வரங்கள் கொடுப்பதாகச் சொன்னுர்கள். அவர்களோ யாதொரு வரமும் தேவையில்லை என்று பதில் கூறிவிட்டனர். ஆனுல் தவத்தை மட்டும் விட்டபாடில்லை. தசைப் பற்றின்றி எலும்புக் கூடாயினர். கடைசியில் ஹரியே வந்து நின்று, "எந்த வரங்களை விரும்புகிறீர்கள்?" என்று அசரீரிக் குரல் கொடுத்து பேசினுர். அதற்கு அவர்கள், "எந்த ரூபத்தைக் கண்டு சம்பு பகவான் மனதில் தங்களை ஆராதிக்கிருரோ, மகா வித்துவானுன காகப்பு சுண்டியின் மானஸரோவராகிய மனதில் எப்படி ஹம்சப் பறவைபோல் சஞ்சரிக்கிருரோ, எந்த ரூபத்தில் வேதங்கள் ஆரோகணிக் கின்றனவோ அந்த உன்னதமான ரூபத்தைஎங்களுக்குக் காண்பிக்க வேண்டும் என்றனர்.

இந்தப் பக்திப் பிரேமையில் பகவான் குளிர்ந்து சர்வலோக அதிபதியாக மனுதம்பதிகள் முன் தோன்றினுர். பகவான் நீலோத்பலமான சியாமள நிறம், மேக கம்பீரக் குரல், கோடிக்கணக்கான மன்மதர்கள் வெட்டும்படியான இலாவண்ய விலாசங்களில் தோன்றினுர். (அவர் தோன்றி யதைப் பற்றிய அழகு வருணனை 10 சுலோகங்கள்)

இத்தகு அழகு சமுத்திரமாகிய ஹரிரூபத்தைப் பார்த்து மனுவும் சதரூபையும் திருப்தியடையாமல் மேலும் தங்களை மறந்து தங்கள் கைகளால் பகவான் பாதகமலங்களைப் பற்றிப் பிடித்துத் தரையில் வீழ்ந்து வணங்கினுர்கள்.

பகவானுடைய தோற்றத்தையும், இன்பமயமான சொற்களையும் கேட்டுத் தங்கள் மனத்தில் அடக்கி வைத்

திருக்கும் பெரிய ஆசையைச் சொல்ல முடியாமல் தவித்தார்கள். சதைப் பற்றில்லாத எலும்புக்கூடான உடல். அதிகமான வயோதிகத் தன்மை இவை காரணமாக அவர்கள் சந்தேகப்பட்டார்கள். சர்வத்தையும் அறியும் பகவான் இவர்கள் மனக்கிடக்கையை அறிந்து வேண்டும் வரங்களைத் தாராளமாகக் கேட்குமாறு அருள்புரிந்தார். கடைசியில் எதையும் மறைக்க முடியாமல், வாய்திறந்து 'ஹரிக்குச் சமமான புத்திரன் ஒருவன் எங்களுக்கு வேண்டும்' என்று கேட்டனர்.

விலைமதிக்க முடியாத இந்தப் பிரார்த்தனையைக் கண்டு பகவான் கருணை கூர்ந்து, "என்னைப் போன்ற ஒருவனை எங்ஙனம் தேடி அலைவது? ஆதலால் நானே சுயமாக உங்கள் புத்திரனாக அவதரிப்பேன்" என்று வரம் கொடுத்தார். சதரூபையும் அப்படியே வேண்டும் என்றாள். "பகவான் பிரம்மா முதலியவர்களை உண்டுபண்ணுகிறவர்: ஜகத்துக்கே அதிபதி. ஆகவே அவருடைய வரத்தைப் பற்றிச் சந்தேகமில்லை. நிச்சயம் நடக்கும் என நம்புகிறேன்" என அவள் விசுவசித்தாள்.

மேலும் ஓர் ஆசையைத் தெரிவித்தாள். "எப்படி ஜலமில்லாமல் மீன் உயிர் வாழ்வதில்லையோ அதுபோல என் ஜீவன் உம்மையே நம்பியிருக்க வேண்டும்" என்றாள்.

"உங்களை ஆசீர்வதிக்கின்றேன். சொர்க்கத்தில் போய்க் கொஞ்சகாலம் போகங்களை அனுபவித்துவிட்டுப் பின்பு அயோத்திக்கு வந்து இராஜாவாகவும், இராணியாகவும் தோன்றுவீர்கள். அப்போது நான் உங்களுக்குப் புத்திரனாக அவதரிப்பேன்" என்று வரம் அளித்து மறைந்தார். மனு தம்பதிகளும் ஹரிபகவானின் ரூபத்தைத் தாரணை பண்ணிக்கொண்டு மோட்ச லோகம் சென்றனர். பின்னர் அவ்விருவரும் தசரதமகாராஜாவாகவும், கோசலையாகவும் பூமியில் வந்து பிறந்தார்கள். அவர்களுக்குப் புத்திரனாக இராமன் வந்து அவதரித்தார்.

## நாரத மகரிஷி ஹரிபகவானுக்குக் கொடுத்த சாபம்

நாரத முனிவரின் மகிமைகள் நாலாவிதமாகப் புகழப்படுகின்றன. அவர் சிறந்த விஷ்ணு பக்தர். பரம் பொருளை நன்கு தெரிந்து தெளிந்த பரம ஞானி. ஹரி பகவான் அவருக்கு என்ன தீமை செய்தார்? நாரதர் பகவானுக்குக் கொடுத்த சாபமென்ன? என்று பார்வதி தேவி சிவபெருமானிடம் கேட்டாள்.

சிவபெருமான் பார்வதிக்குக் கூறியவற்றைத்
துளசி கூறுகிறார்:

நாரதருக்குத் தட்சனால், எப்போதும் இடம் விட்டு இடமாக அலைந்து திரிய வேண்டும் என்று ஒரு சாபம் கொடுக்கப்பட்டிருந்தது. இந்தச் சாபத்தைப் போக்கிக் கொள்வதற்காக நாரதர் கங்கையின் பக்கம் அழகான ஒரு குகையில் ஆசிரமம் அமைத்து, ஹரிபக்தியில் ஈடுபட்டுத் தியானத்தில் அமர்ந்தார். இந்தத் தவத்தின் அதிமகிமை யில் வெற்றி பெற்று விடாது தடுப்பதற்குத் தேவராசன் மன்மதனை அனுப்பித், தேவமாதர்கள் மூலம் காமலீலை களைச் செய்வித்தான். எல்லா முயற்சிகளும் இராமபக்தி யின் மகிமையால் தோல்வியடைந்தன. ஆதலால் மன்மதன் நாரதரிடம் மன்னிப்புக் கோரி தேவர்களிடம் மீண்டும் விஷயத்தை அறிவித்தான்.

இதனால் நாரதருக்குத் தமது சக்தியின்மீது அதிக கர்வம் உண்டாகிவிட்டது. இராம பக்தியின் வல்லமையைத் தம்முடையதாகவே கருதி விட்டார் சிவபெருமானிடம் சென்று மன்மதனையும் தேவமாதர் களையும் தன் தவ ஆற்றலால் வெற்றி கொண்ட தாகத் தற்புகழ்ச்சி செய்து கொண்டார். சிவபெருமான்

நாரதரின் ஹரிபக்திக்கு மகிழ்ச்சி தெரிவித்துவிட்டு, இது பற்றி ஹரிபகவானிடம் பெருமைப்படுத்திக் கூருமலிருக்க உபதேசித்து, எச்சரிக்கையும் செய்தார். இது நாரதருக்குப் பிடிக்கவில்லை. ஒரு சமயம் நாரதர், கான வாத்தியமான வீணையைக் கையில் எடுத்துக் கொண்டு ஹரியைப் பாடிக் கொண்டு நாராயணரிடம் சென்ருர் அண்ட சராசரங்களையும் ஆட்டி வைக்கும் சூத்ரதாரியான பகவான் முனிவரை வரவேற்று மகிழ்வுடன் தழுவி, ஆசனம் கொடுத்து, அவரைப் பலவிதமாகப் பூஜித்தார்.

பலதடவை சிவபெருமான் எச்சரித்தும் நாரதர் தற்பெருமையேடு ஹரியிடம் தனது பக்திப்பிரபாவத்தையும் காமதேவரின் திருவிளையாடல்களைத் தான் வென்றதையும், அவர்களுடைய தோல்வியையும் கூறினர். நாரதர் ஹரியை எவ்வளவு புகழ்ந்து கூறினாலும், அந்தர்யாமியாகிய பகவான் நாரதரைப் புகழ்ந்து விட்டு அவர் மனதில் பெருமரமாக வேர்விட்டுக் கிளைத்து வளர்ந்துள்ள கர்வத்தைக் கண்டு, அதற்கு விளையாட்டாக அவருக்கு ஒரு பாடம் கற்பிக்கத் திருவுளம் பற்றினர்.

நாரதர் திரும்பிப் போகும் வழியில் நூறு யோசனைகள் பரப்புடைய ஒரு நகரம் ஹரியின் மாயையினல் தோன்றியது. அது அழகில் வைகுண்டத்தையும் விஞ்சியதாக விளங்கிற்று. அங்குத் தேவர்கள் யாவரும் மக்கள் வடிவில் இருந்தார்கள். அந்தப் பட்டணத்தைப் பண்புக்குப் பெயர்போன ஒரு அரசர் ஆண்டு வந்தார். அவருக்கு மோகினி போன்ற அழகு சுந்தரி ஒருத்தி இருந்தாள். அவளுக்கு சுயம்வரம் ஏற்பாடாகியிருந்தது அப்போது நாரத மகரிஷியும் அந்த நகரத்திற்குச் சென்ருர். அந்த அரசர் தன் குமாரியை நாரதரிடம் அழைத்து வந்து நமஸ்காரம் செய்வித்து அவரை ஆசீர்வதிக்க வேண்டினர். முனிவர் அரசகுமாரியின் அழகில் மயங்கி, தன்னிலை மறந்து அவளை அடைய ஆசைப்பட்டார்.

இதற்கு வழியாக அழகான சரீரம் ஒன்று தனக்குத் தேவையென்று தோன்றியது. அரசகுமாரி எல்லோரை யும்விட தன்னை விரும்பும் அளவுக்கு மிக அழகான தேகத்தைத் தனக்கு வழங்கும்படி ஹரியிடம் பிரார்த்தித்து அவர் திருவருளை நாடினார். எல்லாம் அறிந்த பகவான் மனதிற்குள் மகிழ்ந்து கொண்டு அவர் வேண்டியபடி அருள்புரிந்து மறைந்தார். பகவானுடைய மாயையில் வசப்பட்ட நாரதர், மதிமயக்கம் அடைந்து, மிக நம்பிக்கை யுடன் சுயம்வர மண்டபத்தை அடைந்தார். மாயையில் தன்னை மறந்து மோகமுற்று, கன்னியை நோக்கித் தனக்கு மாலையிட எதிர்பார்த்து அமர்ந்திருந்தார். (பகவான் கூறியவற்றின் உட்பொருளை அவர் உணர வில்லை)

முனிவருடைய தன்மையைக் கருதி ஹரிபகவான் அச்சமயத்தில் ஒரு கோரரூபத்தை அவருக்கு ஏற்படுத்தி விட்டார். நாரதர் தன வடிவழகைப் பெருமையாக நினைத்துக் கொண்டு சுயம்வர மண்டபத்தில் இருந்தார். அங்கே பிராமணர் வடிவத்தில் இருந்த சிவகணங்கள் முனிவரைக் கேலி செய்தனர். நாரதருக்கோ மோகம் அதிகரித்தது. அரசகுமாரி முனிவருடைய கோர ரூபத்தைக் கண்டு ஜெயமாலையைத் தாங்கிக் கொண்டு வேறு இடத்துக்குக் கடந்து போய் விட்டாள். கர்வத் துடன் தன் அழகில் மயங்கி ஏங்கிக் கொண்டிருந்த முனிவர் கதிகலங்கி ஏமாற்றமடைந்தார்.

ஹரிபகவானும் ஒரு அரசரைப் போல் வேடம் பூண்டு அழகான வடிவில் சுயம்வரத்திற்கு வந்திருந்தார். அங்கே அந்தப் பெண் அவருக்கு மாலையிட்டாள். அங் கிருந்த சிவகணங்கள் நாரதரைப் பார்த்து அவருடைய கோர ரூபத்தைக் கண்ணாடியில் பார்க்கும்படிக் கூறி மறைந்தார்கள்.

முனிவர் தன் ரூபத்தைத் தண்ணீரில் பார்த்து நிஜ ரூபத்தைக் கண்டு கொண்டு, வெட்கப்பட்டார். மிக்க சினம் கொண்டவராய் பகவானைச் சபிக்கும் பொருட்டு எழுந்து சென்றார். வழியில் ஹரியைச் சந்தித்தபோது இலக்குமிதேவியும், அந்த அரசகுமாரியும் அவருடன் இருப்பதைக் கண்டார். கோபம் கொண்ட முனிவர் பகவானைப் பார்த்து, "கோபத்தில் என்னை வேண்டு மென்று அவமானப் படுத்தினீர். ஆகையினால், எந்தச் சரீரத்தை எடுத்துக் கொண்டு ஒரு பெண்ணுக்காக நான் அவஸ்தைப்பட்டது போல, நீரும் சங்கடப்பட வேண்டும். குரங்கின் சரீரத்தை எடுக்க வைத்து, என்னை அவமானப் படுத்தினீர். அந்தக் குரங்குகளே உமக்குச் சகாயம் செய்யும். நான் விரும்பிய பெண்ணை, என்னிடமிருந்து பிரித்து விட்டீர். அதுபோல் உம்முடைய மனைவியைப் பிரிந்து அந்த விரக தாபத்தில் துக்கமடைவீர்" என்று சபித்தார். ஹரிபகவான் நாரதரை நமஸ்கரித்துத் தம் முடைய மாயையைத் திருப்பி அழைத்துக் கொண்டார்.

அந்த மாயை விலகிய உடனே முனிவர் அறிவு தெளிந்து இலட்சுமி தேவியும் அரசகுமாரியும் அங்கு இல்லாததை உணர்ந்தார். ஹரியின் பாத கமலங்களைப் பிடித்து வணங்கித் தயை காட்டுமாறு வேண்டினார். பகவான், "சிவனுக்குச் சமமான பிரியமுள்ள புருஷன் எனக்கு உலகில் யாருமில்லை; திரிபுரவாசியான சிவன் எவனுக்கு அருள்புரியவில்லையோ அவனுக்கு என்மீது பக்தி உண்டாகாது உம்முடைய இருதயத்தில் இப்பேர்ப் பட்ட நம்பிக்கையை உண்டுபண்ணிக் கொண்டு பூமியில் சஞ்சரித்து வாரும். இப்போது என்னுடைய மாயை உம்மை விட்டு விலகி விட்டது. நீர் சாந்தம் அடைந்து சத்தியலோகம் அடையலாம்" என்றார்.

---

## ஜலந்தரன் என்ற அசுரனின் மனைவி பரமசதியின் கற்பும் அவள் கொடுத்த சாபமும்

---

ஒரு காலத்தில் ஜலந்தரன் என்ற தைத்தரிய தேசத்தரசன் எல்லாத் தேவர்களையும் தோற்கடித்து, அவர்களுக்குப் பெரும் துன்பம் விளைவித்து வந்தான். அவர்கள் சிவபெருமானிடம் முறையிட அவர் அவனோடு பெரும் போர் புரிந்தார். ஜலந்தரனை சிவனால் வெல்ல முடியவில்லை. காரணம் அவன் மனைவி, "பரமசதி" மாபெரும் பதிவிரதை, கற்புக்கரசி. அவளது கற்பின் ஆற்றலே ஜலந்தரனின் வெற்றிக்கெல்லாம் உறுதுணை யாயிற்று. ஆகவே தேவர்கள் ஹரிபகவானை வேண்டினார்கள். ஹரிபகவான் ஜலந்திரனின் ஜீவசக்தி இருக்கும் இரகசியத்தை ஆராய்ந்து அவன் மனைவியின் கற்புக்குக் களங்கம் விளைவித்து, ஜலந்தரனைக் கொன்று தேவர்கள் வேண்டுகோளை நிறைவேற்றினார். ஆனால் அந்த மகாபதிவிரதை இந்த இரகசியத்தை அறிந்து கடுங்கோபங் கொண்டு ஹரிபகவானுக்கு ஒரு சாபம் கொடுத்தாள். இந்த ஜலந்தரன்தான் முடிவில் ஹரிக்கு எதிரியாகி இராவணனாகப் பிறந்தான்.

ஜலந்தரன் மனைவி பரமசதி ஹரிபகவானுக்கு என்ன சாபம் கொடுத்தாள்? என்பதைத் துளசிதார் தமது இராமாயணத்தில் வெளிப்படையாகக் கூறவில்லை. தமிழாக்கம் செய்த திரு. எஸ். ஜெகந்நாராயணன் அவர்களும் என்ன காரணம் கொண்டு விட்டார்கள் என்றும் தெரியவில்லை. ஆனால் துளசி தாசரது மானஸ இராமாயணத்தை நோக்கினால் கீழ்க்கண்ட கருத்து நமக்குப் புலனாகின்றது.

முன் கல்பத்தில் மகா கற்புடைய பரமசதியின் கற்புக்குக் களங்கம் கற்பித்த ஹரிபகவான் அந்தக் கற்பின் மகிமையை வெளிப்படுத்துவதற்காகவே இராமாவதாரத்தில் சீதையின் கற்பைச் சோதிக்கும் பான்மையில் அவளைச் சந்தேகித்து அக்கினிப் பிரவேசம் செய்வித்து கற்பின் மாபெரும் ஆற்றலைச் சீதாபிராட்டி மூலம் உலகுக்கு எடுத்துக் காட்டினார். இது ஹரிபகவான் முன் கல்பத்தில் தைத்திரியனான ஜலந்தரனைக் கொல்வதற்காக அவனுடைய மனைவியாகிய கற்புத் தெய்வத்திற்குக் களங்கம் செய்த குற்றத்திற்குப் பிராயச்சித்தம் செய்வதாக அமைகிறது. மேலும் இந்தக் காரணமாக அந்தப் பெருந்தேவியின் கணவன் இராவணனாகவும், இராமனுக்கு எதிரியாகவும் அமைந்தான் என்றும் நாம் கொள்ளலாம்.

---

## கோசலை இராமனைக் காணும் காட்சி

---

ஒரு நாள் கோசலை குழந்தை இராமனை நீராட்டி அழகுக்கு அழகு செய்து ஊஞ்சலில் தூங்க வைத்து விட்டுத், தான் ஹரிபூசை செய்வதற்காக நீராடி நைவேத்தியம் செய்ய சமையலறைக்குச் சென்றாள். அங்கு எல்லாம் முடித்து நைவேத்தியத்துடன் பூசைப் பீடத்துக்கு வந்து நைவேத்தியத்தைப் படைத்து சுவாமியை நமஸ்காரம் செய்தாள். அப்போது தன் குழந்தை அங்கு வந்திருந்து அதைச் சாப்பிடுவதைக் கண்டு திகைத்துப் பயந்து சந்தேகம் கொண்டு, ஓடிப் போய் ஊஞ்சலில் கிடத்திய குழந்தையைப் பார்த்தாள். அங்கு அவள் கிடத்தியபடியே குழந்தை அயர்ந்து தூங்குவதைக் கண்டாள். பின்பு மறுபடியும் பூசை அறைக்குச் சென்று இங்கும் தன் குழந்தை சாப்பிட்டுக் கொண்டிருப்பதைக்

கண்டாள். ஒரே குழந்தை இரண்டு வெவ்வேறு அறை களில் வெவ்வேருகக் காட்சிளிப்பதைக் கண்டு நடுக்கமும், திகைப்பும் அடைந்து செய்வதறியாது நின்ருள். தாயின் திகைப்பை அறிந்த பகவான் தன் சிறிய வாயால் புன்னகை பூத்து மகிழ்ந்தார். அப்போது குழந்தையின் வாயைக் கோசலே நோக்கினுள். அங்கே கோடானுகோடி சராசரங்களேயும், சூரியசந்திரர்கள் மலேகள், கடல்கள், ஆறுகள் இன்னும் அதுவரை காணப்படாத பலவற்றை யும் பகவானுடைய விஸ்வரூபத்தில கண்டு மகிழ்ந்தாள். அந்த ரூபத்தில் இராமன் பலவாருகத் தன்னேத் தாயா ருக்கு அறிமுகப்படுத்தி இந்த நிகழ்ச்சியை யாரிடமும் சொல்ல வேண்டாமென்று கேட்டுக்கொண்டதாகவும் துளசிதாசர் தெரிவிக்கிருர்.

---

## இராம பட்டாபிஷேகத்தைத் தடுப்பதற்குத் தேவர்கள் சரஸ்வதி தேவியை அனுப்புதல்

---

இராமனுக்குப் பட்டாபிஷேகம் எனத் தெரிந்து அயோத்தி நகரம் விழாக் கோலம் பூண்டது. மக்கள் யாவரும் மகிழ்ச்சிக் கடலில் மூழ்கியிருந்தார்கள். இதற்கு மாருக இராமனுக்குப் பட்டாபிஷேகம் என்ற தகவல் தேவ லோகத்தை எட்டியதும் தேவர்கள் யாவருக்கும் பெரும் ஏமாற்றத்தையும், ஆழ்ந்த துக்கத்தையும் கொடுத்தது. திருடர்களுக்குப் பூரணமான வெண்ணிலா எவ்விதம் நன்மை பயக்காதோ, அதுபோல் மண்ணுலக இராம பட்டாபிஷேகம் தேவலோக வாசிகளுக்கு நன்மை பயக் காது என்று துளசிதாசர் பேசுகிருர். இராமன் பட்டம் தரித்துப் பூமியை ஆளத் தீர்மானித்து விட்டால் தேவர்

களுக்கும் சாதுக்களுக்கும் கொடுத்த வாக்குறுதி நிறை வேருமல் உலகமெங்கும் இருள் சூழ்ந்து விடுமே என்று நினைத்து, தேவர்கள் அவசரமாக சபையைக் கூட்டினூர்கள் இராம பட்டாபிஷேகத்தை எவ்விதத்திலும் நிறுத்தியாக வேண்டும் என்று தீர்மானித்துக் கல்விக் களஞ்சியமான கலைமகளை வணங்கி அதற்கு உதவுமாறு அவள் கால்களில் விழுந்து கெஞ்சிக் கேட்டார்கள்.

இராம பட்டாபிஷேகத்திற்கு அபவாதம் செய்வ தற்கு மனம் வருந்தினூலும் உலக நன்மைக்காக ஒருவாறு மனந்தேறி அந்தப் பழியை ஏற்றுக்கொள்ள கலைமகள் சம்மதித்து அயோத்தி வந்து சேர்ந்தாள்.

பகவானூக அவதரித்துள்ள இராமன் பட்டம் தரித்து அரசாளுவதைத் தடுப்பதற்கு மிகப் பெரிய ஆற்ற லும் தியாகமும் தேவையெனத் தீர்மானித்தாள் கலைமகள். கேகய நாட்டு மன்னன் மகள், சக்கரவர்த்தியின் பத்தினி யாக அமைந்து சம்பராசுரப் போரில், கணவனுக்காகப் பெரும் தியாகங்களைச் செய்து, இரு வரங்களைப் பெற்று அவைகள் இரண்டும் தேவையற்று மறந்து கிடப்பதைக் கலைமகள் தன் ஞானக் கண்களால் கண்டாள். "மந்தரை" என்னும் பணிப் பெண் மனத்தில் குடிலப் புத்தியை உண்டு பண்ணிக் கற்புத் தெய்வம் கைகேயியின் சிந்தனையைத் திரிக்கச் செய்தாள்.

இவற்றின் மூலம் இராமனுக்குப் பட்டம் சூட்டு வதை நிறுத்தி, பரதனுக்குப் பட்டம் வேண்டுவதோடு நிற்காமல், இராமனை நாட்டை விட்டுக் காட்டிற்கு அனுப்பி வைக்கவும் வேண்டிய ஏற்பாடுகளைச் செய்து, முடித்து சரஸ்வதிதேவி தேவலோகம் சென்றதாகத் துளசி தாசர் அறிவிக்கிருர்.

---

728

## ஜம்பு (சிவன்) பகவானும் சசி (பார்வதி) தேவியும் இராமனைத் தரிசித்தல்

---

துளசிதாசர் தாம் வணங்கும் தெய்வமாகிய இராமனை சிவன், பிரம்மா, விஷ்ணு ஆகிய மூவருக்கும் மேலாக வைத்து வணக்கம் செய்கிறார். எவருக்குமில்லாத ஏற்றம் கொடுக்கும் வகையில் இராமனுடைய புகழ் பேசப்பட வேண்டும் என்பதற்குத் தமது இராமாயணத்தின் பாலகாண்டத்தில் பார்வதி பரமேஸ்வர சம்வாதமாக ஒரு நிகழ்ச்சியை அமைத்திருக்கிறார்.

முன்பொரு காலத்தில் பரமேஸ்வரன் ஹரிபக்தியின் பெருமைகளை அகத்தியருக்குக் கூறியதைச் சசிதேவி கேட்டுக்கொண்டிருந்தாள். இருவரும் கைலாயம் அடைந்தனர். அங்கே சிவன் இராமநாமத்தையே எப்போதும் ஜெபிப்பதைப் பார்த்துக்கொண்டிருந்த பார்வதிக்கு ஒரு சந்தேகம் ஏற்பட்டது. ஜெகமனைத்திற்கும் ஈஸ்வரனாக இருக்கின்ற தனது பதி, வேறு ஒருவரை சதா ஜெபித்துக் கொண்டிருக்கிறாரே! அவர் யார்? என்பதுதான் அது. இந்தச் சமயத்தில்தான் இராமன் பூபாரத்தைக் குறைக்கப் பூமியில் மனித அவதாரம் செய்துள்ளார் என்று அறிந்து, இராமனுக்கும் தெரியாமல் சிவன் தன்னை மறைத்துக் கொண்டு இராமனுடைய கோலாகல ரூபத்தைக் கண்டு களிக்கப் பூவுலகிற்குச் சென்றார். சென்ற சமயம் நீசனான இராவணன் சீதையைத் தூக்கிச் சென்று விடவே இராமன் சீதையைப் பிரிந்து வருத்தமுற்று இலக்குவனுடன் அவளைத் தேடி அலைந்து கொண்டிருந்தார். இந்த நேரத்திலும் இராமனுடைய மகிமையையும் அழகு சமுத்திரத்தையும் கண்டு ஆனந்தம் அடைந்து ஜெயகோஷம் செய்து திரும்பினார். ஜம்பு பகவான் ஜெகத்துக்கெல்லாம்

ஈசனாக இருப்பவர். இவர் சாதாரண அரசகுமாரனான இராமனுக்கு அதுவும் மனைவியை இழந்து பித்தனாக அலைகிறவருக்கு அடிமையாகிவிட்டாரே என்று சந்தேகித்த பார்வதி தேவி, இராமனைச் சோதிக்க எண்ணினார். தேவியின் சந்தேகத்தை அறிந்த சிவன் அவளை நேரில் போய்ப் பார்த்துத் திரும்பும்படியும், அதுவரை தான் இந்த அரசமரத்தடியிலேயே இருப்பதாகவும் சொல்லி அனுப்பினார்.

இவ்வாறு அங்கிருந்து சென்ற தேவி பல தடவை யோசித்துச் சீதையின் உருவத்தை வேடமாகத் தரித்துக் கொண்டு, இராம இலக்குவர்கள் வருகின்ற வழியில் அவர்களுக்கு எதிராக வந்து கொண்டிருந்தாள். இலக்குவன் சசிதேவியின் வேடத்தைக் கண்டு திகைத்துப் பிரமை பிடித்தவன் போல் பேச நாவெழாமல் ஊமையாகி விட்டான். எல்லாம் அறிந்த சர்வக்ஞனான இராமச்சந்திரன் தேவியின் கபட வேடத்தைத் தனது ஆத்ம பலத்தால் கணப் பொழுதில் அறிந்து, கோமளமான சொற்களால் பேசலானார். தேவியை வணங்கி, தான் இராமன் என்றும், தசரதன் புதல்வன் என்றும் முகமன் கூறி, "மகேஸ்வரர் எங்கிருக்கிறார்? தேவி மட்டும் தனியாகக் காட்டில் சஞ்சரிக்கக் காரணம் யாது" என்றும் வினவினார்.

இராமனைத் தன் கண்களால் தரிசித்த பெருமகிழ்ச்சி ஒரு புறம் இருந்தாலும், தன் பதியாகிய பரமேஸ்வரனுடைய சொற்களில் சந்தேகப்பட்டதும், அவர் உத்தரவு இல்லாமல், அவர் வணங்கும் தெய்வத்தின் மகாலட்சுமியான சீதையினுடைய வேடத்தைத் தரித்து இராமனைச் சோதித்ததும் பெரும் அபசாரம் என்று நினைத்துப் பயந்து சங்கடப்பட்டுக் கொண்டிருந்தாள் இதை அறிந்த

காருண்ய மூர்த்தி, இராமன் சீதையைத் தேடும் சாதாரண மனித குணத்தை நீக்கித் தம் பரத்துவப் பெருமையைச் சிறிது காட்ட நினைத்தான். தேவி திரும்பிப் போகின்ற வழியில் இராமன், சீதை இலட்சுமணன் முதலியோர் முனிவர்கள் புடைசூழச் சச்சிதானந்த ரூபமாகச் சேவிக்கப்பட்டுச் சோபிதமாக விளங்குவதாக அவளுக்குக் காட்சியளித்தார்.

கணவனிடம் திரும்பிய பார்வதி, தான் சீதை உருவத்தை வேடமாகத் தரித்ததையும், இராமனைச் சோதித்ததையும் பயந்து கூருமல், பத்தாவுக்கு ஏற்ற பத்தியில்லாமைக்கு வருந்தி, துக்கத்தில் தட்சனுடைய வேள்வியில் விழுந்து மரணமடைந்தாள். மரணத்திற்கு முன்பு, அடுத்த பிறவியிலும் பரமேஸ்வரனையே பதியாக அடைய வேண்டும் என்று இராமனை வேண்டி வரம் பெற்ற காரணத்தால் இமயத்தில் தவம் செய்து கொண்டிருந்த பரமேஸ்வரனும், தனது தவத்தை நிறுத்தி, உமா தேவியாக மறுபிறவி எடுத்து வந்த பார்வதி தேவியை மணந்து கொண்டார்.

---

## அகலிகை சாப விமோசனம்

---

சரித்திர காலத்திற்கு முன்பு வாழ்ந்த வான்மீகி அகலிகை கதையை அக்கால வழக்கபடி வர்ணித்துள்ளார். காமத்தில் மூழ்கிய தேவேந்திரன் கௌதம முனிவர் இல்லாத நேரத்தில் அவருடைய ஆசிரமத்திற்கு வந்து அவர் பத்தினி அகலிகையை விரும்பி அடைந்து, அவளுடன் கொண்ட இன்பத்திற்காக அவளுக்கு நன்றி தெரிவித்து விடை பெற்ருர். அப்படிப் பிரியும் போது வீடு

திரும்பிய கௌதம முனிவர், நடந்ததை அறிந்து கடும் சினம் கொண்டு மனைவியைக் கல்லாய்ப் போகும்படி சபித்தார் என்று அறிகிறோம்.

பின்னால் கி. பி. 9-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த கவிச்சக்ரவர்த்தி, தமிழ் மரபு கெடாமல் பாதுகாப்பதற்காக வால்மீகி இராமாயணத்தைச் சிறிது மாற்றி அகலிகை செய்த தவற்றை வேண்டுமென்று அறிந்து செய்யப் பட்டது அல்ல என்று நாகரிகமாகக் கூறுகிறார். அதாவது மாறு வேடத்தில் வந்த இந்திரனைக் கணவன் என்று நினைத்துத் தாழ்ந்து விட்டாள். நெஞ்சினால் பிழை யில்லாதாள் என்றார். பின்னால் தவறு என்று உணர்ந்த பின்னும் தவிர்த்திலள் என்ற காரணத்தால் கணவனுக்கும் மாற்றானுக்கும் வேற்றுமை தெரியாமல் ஜடமாகக் கிடந்து தாழ்ந்து விட்டமைக்காகக் கௌதம முனிவர் மனைவியை ஜடப் பொருளாகிய கல்லாகவே போகுமாறு சபித்தார் என்று கூறினார்.

கி. பி. 16-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த துளசிதாசர் இராம பக்தியை மையமாகக் கொண்டு எழுதுகிற தனது இராமாயணத்தில் அகலிகை சாபம் என்ன என்பதை மட்டும் கூறிவிட்டு என்ன காரணத்தால் அது நிகழ்ந்தது என்ற பின்னணிக்குள் செல்லாது விட்டு விட்டார். அவர்கள் செல்லும் மார்க்கத்தில் ஒரு கற்சிலையைக் கண்டு அது என்ன? என்று விஸ்வாமித்திரரை இராமன் கேட்டார். விஸ்வாமித்திரர் பதில் சொல்லுகிறார். கௌதம மகரிஷியின் மனைவி அகலிகை, சாபவசமடைந்து கல்லின் சரீரத்தை அடைந்தவளாக வாயுவை ஆகார மாகக் கொண்டு உன்னுடைய புண்ணியமான சரண கமலங்களின் அனுக்கிரஹத்தை வேண்டிக் கிடக்கிறாள், நீ இந்த உத்தமிக்கு அருளைக் கொடு என்றார். இராம

னுடைய சரண கமலங்கள் ஸ்பரிசித்த உடனே அகலிகை ஜீவன் பெற்று எழுந்தாள். அகலிகை இராமனுடைய பாதங்களை நமஸ்கரித்துக் கூறலானாள். நான் பரிசுத்த மில்லாத பெண். நீரோ இந்தப் பதினான்கு லோகங் களுக்கும் பவித்ரமானவர். பாவங்கள் நிறைந்த இந்த சம்சாரக் கடலிலிருந்து மாந்தர்களை விடுவிப்பவர். என் பதியின் சாபமும் என்னுடைய நன்மைக்காகவே ஏற்பட்டிருக்கிறது. இந்த நேத்திரங்களால், ஞானிகளும் காண முடியாத உத்தம உருவத்தை ஆசை தீரும்படிப் பார்க்கும் பாக்யம் பெற்றேன். இவ்விதமாகத் துதி செய்து பகவானுடைய பாத கமலங்களை நமஸ்கரித்து விட்டு ஆனந்தமாக அகலிகை மனங்குளிர்ந்து கணவனிடம் சேர்ந்தாள்.

இவ்வாருக இராமாவதாரத்தில் இராமன் திருவடி களின் பெருமையை மட்டும் சிறப்பிக்க வேண்டுமளவுக்குக் கதையைக் கூறிவிட்டு, உபகதைகளினுள் அதிகம் செல்லாமல் பக்திப் பாதையிலேயே மேற்சென்று விடுவது துளசியின் ஒரு தனி நயமாகும்.

---

## இராமனும் சீதையும் முதல் சந்திப்பு

---

ஆதிகவி வான்மீகி மனுதர்மத்தைப் பின்பற்றி திருமணத்தை ஒரு உயர்ந்த வேள்வியாகவே படைத் துள்ளார்.

இராமனும், சீதையும் திருமணத்துக்கு முன்பு ஒருவரையொருவர் கண்ணால் பார்த்ததுமில்லை; மனத்தால் எண்ணியதுமில்லை.

கௌசிக முனிவருடைய வேள்வியைக் காத்து தாடகை வதம் முடிந்த பின்பு, இராம லெட்சுமணர்களை முனிவர் மிதிலையில் தனுஷயக்ஞம் காணும் பொருட்டு அழைத்துச் சென்றார். நாண் ஏற்றி வில் ஒடிக்கும் வரை "சுயவரம்" என்ற ஒன்று அங்கு இருப்பதாகவும் வில்லில் நாண் ஏற்றியவர்க்கு ஜனகராஜன் புத்திரி ஜானகி பரிசாகக் கிடைப்பாள் என்றும் இராமனுக்குத் தெரிவிக்கப் படவில்லை. பரிசுப் பொருள் என்பதொன்றை அறிவித்து விட்டால், சுயநலம் மேலிட்டு ஆற்றலுக்கு ஏதேனும் நலிவு ஏற்பட்டு விடும் என்ற உயர்ந்த கொள்கையை வான்மீகி முனிவர் கடைப் பிடித்திருப்பது, மிகவும் பாராட்டத்தக்கதாகும்.

வனவாச காலத்தில் ஆரண்யத்தில் அத்திரி முனிவர் ஆஸ்ரமத்தில் இராமனும் சீதையும் தங்கியிருந் தார்கள், மகரிஷியின் மனைவி அனுசூயாவும் சீதாப்பிராட்டி யும் தனிமையாக உரையாடிக் கொண்டிருந்த போது அனுசூயாதேவி பிராட்டியிடம் அவளுடைய திருமண வைபவத்தை விவரமாகக் கூறும்படிக் கேட்கவே; பிராட்டி கூறலானாள்.

"சக்ரவர்த்தித் திருக்குமாரர்கள் தேவதனுஸை பார்க்க வந்திருக்கிறார்கள் என்று விசுவாமித்திரர் கேட்ட பின்பு தான் இராஜ சபைக்கு அந்த மிகப் பெரிய வில் ஐயாயிரம் வீரர்களால் கொண்டு வரப்பட்டது. இராமன் எழுந்து வந்து நாணேற்றிய போது அது ஒடிந்தது. அப் போது என் தந்தை அவருடைய பிரதிக்ஞைப்படி பேரானந்தத்திலும் அவசரத்திலும் ஜலத்தை எடுத்து என்னைத் தானம் செய்யப் போனார். புருஷோத்தமனான இராமன் தன் தந்தை அனுமதி பெறும் வரையில் திரு மணத்திற்கு உடன் படவில்லை. அதனால் என் தந்தை

தூதர்களை அனுப்பி அயோத்தியிலிருந்து தசரத மன்னனை வரவழைத்து மகாஞானியான இராமனுக்கு என்னை வேத விதிப்படி விவாகம் செய்து கொடுத்தார்.

[இந்த வானுயர்ந்த பண்பு ஆதிகவி வால்மீகியின் தனி உடைமையாகும்]

கல்வியிற் பெரியவர் கம்பர், சங்க இலக்கியங்களையும் ஒருங்கே கற்றுத் தேர்ந்தவர். தமிழ் நாகரிகத்தை மரபோடு காப்பவர். எனவே பிற பெண்களைச் சிந்தையாலும் தீண்டாத இராமனைக் கண்ணாலே தீண்டும்படியாகத் திருமணத்துக்கு முன்பு காதல் காட்சி ஒன்று அமைத்து தமிழ் மணம் சுவைக்கச் செய்து விட்டார். மிதிலை வீதியில் முனிவருடனும், தம்பியருடனும் செல்லும் இராமன் கன்னிமாடத்தில் உலாவும் சீதையைக் கண்டு காதலுற்று இதயத்தில் இருவரும் மாறிப் புகுந்தனர். என்று வள்ளுவமும் பேசி விட்டார்.

துளசிதாசர் ரிஷிகேஷ் முதல் இராமேஸ்வரம் வரை திரிந்து வால்மீகி இராமாயணத்தைப் பிரவசனம் செய்து வந்த போது வடமொழிப் புலமை கொண்டவர்கள் கம்ப இராமாயண நயங்களைக் கூறுவதைக் கேட்டறிந்தார். குறிப்பாக இந்துஸ்தானியில் புலமை பெற்று காசியில் மடம் அமைத்து வாழ்ந்து வந்த நம் குமரகுருபர சுவாமிகள் இந்தி மொழியில் கம்ப இராமாயணத்தின் பெருமைகளை உபந்யாசம் செய்ததைக் கேட்டு, சில நயங்களைத் தன்னுடைய பக்திக் காவியத்தில் அமைத்துக்கொண்டார். அதன் காரணமாக துளசிதாசர் திருமணத்துக்கு முன்பு இராமனையும் சீதையையும் அரண்மனைப் பூங்காவில் சந்திக்கச் செய்து விட்டார்.

சீதை தன் தாயார் ஆலோசனைப்படி பவானி (பார்வதி தேவி) பூஜைக்கு பூவெடுக்கக் காலையில் தன் தோழியருடன் அரண்மனைப் பூங்காவிற்குச் செல்கிருள். அது சமயம் கௌசிக முனிவருடன் மிதிலையில் தங்கி யிருக்கும் இராம லெட்சுமணர்களும் காலைப் பூஜைக்கு மலர் எடுப்பதற்காக அருகிலிருந்த அரண்மனை நந்தவனத்துக்குச் செல்கிருர்கள். அங்கு இராம லெட்சு மணர்களைத் தற்செயலாகக் கண்ட பணிப் பெண்களில் ஒருத்தி ஓடிப் போய் ஆச்சரியமான அழகு சோபையில் பட்டுப் பீதாம்பரத்துடன் இரண்டு பேர் பூங்காவில் இருப்பதைச் சீதைக்குத் தெரிவித்தாள்.

சீதையும் ஆவலுடன் ஓடி வந்து மிக நாணத்துடன் ஒதுங்கி நின்று, ரகு குலத்தின் சிம்மம் போல் சோபையி லிருந்த இராமச்சந்திரனுடைய திவ்விய மங்கள ரூபத்தைத் தன் மனதில் நிறுத்திக் கொண்டாள். அவருடைய திவ்வியமான விக்கிரகத்தை இருதயத்தில் தரித்துக் கொண்டு மனத்தை ஒருவாறு சந்தோஷப்படுத்திக் கொண்டு வழி நடந்தாள்.

சோபையின் எல்லையற்ற அழகையுடையவளும், பரிசுத்தமான நடத்தையுள்ளவளுமான சீதை, நகரு வதைப் பார்த்த இராமன், அவளுடைய திவ்விய உரு வத்தைத் தன்னுடைய சுந்தரமான சித்தத்தில் சித்திரம் வரைவதுபோல் தீட்டிக் கொண்டான்.

சீதாதேவி, பின்பு பவானி கோவிலுக்குச் சென்று அஞ்சலி செய்து, மனத்தால் தன் எண்ணம் நிறைவேற வேண்டினுள். பவானி தேவியும், சீதையின் பிரேமைக்கு இரங்கி, தன்னுடைய மூர்த்தி உருவத்திலிருந்து அழகான

மாலையை நழுவச் செய்து அசரீரியாக, "எந்தப் புருஷனிடம் உன் மனம் லயித்ததோ, அந்தப் புருஷன் உனக்குக் கிடைப்பான்" என்று ஆசிர்வதித்தாள்.

இராமச்சந்திரன் தன்னுடனிருக்கும் தம்பியிடம் தன் மனதில் ஓடுகின்ற எண்ணங்களைக் கூறினார். அதாவது சத்திரிய குலத்தில் உள்ளவர்கள் தவறு செய்ய மாட்டார்கள். என் மனம் ஒரு போதும் தீய வழியை நாடாது. இந்தப் பெண்ணை என் மனம் விரும்பு வதால், இவள் திருமணம் ஆகாதவளாகத்தான் இருக்க வேண்டும். தெய்வ சங்கல்பம் ஏதுவோ என்றார். பின்பு இராஜ குமாரர்கள் இருவரும்தங்கள் குருவான விஸ்வா மித்திரர் மனைக்குச் சென்றார்கள். இராமன் நடந்தன எல்லாவற்றையும் முனிவர்க்குச் சொன்னார்.

---

## இலக்குவனின் அவதார மகிமை

---

ஆதி கவியான வால்மீகி, இராம கதையில் இராம னின் பரத்துவத்தை இலைமறை காயாகக் காட்டிப் போயி ருக்கிறார். வானுயர்ந்த வால்மீகியின் மூலக் கதையின் கட்டுக் கோப்பைச் சிதைக்காமல் ஆங்காங்குச் சிறிய அல்லது பெரிய மாறுதல்களைக் கம்பனும் துளசியும் செய்திருக்கிறார்கள். இராமனின் பரத்துவ குணத்தைப் பால காண்டத்தில் பால் மணம் மாறாத பருவத்தில், தாடகைப் போரில் இராமனின் கைவண்ணத்தையும், அகலிகை சாப விமோசனத்தில் அவன் கால்வண்ணத்தை யும் காட்டியிருக்கிறார்கள்.

பூலோகச்சேமத்திற்காகத் திருமால் வைகுந்தத்தை விட்டு, தேவியுடனும், தன் படுக்கையான ஆதிசேடனுடனும், பூவுலகில் வந்து அவதரித்து மறம் துடைத்து அறம் காத்த பெருமையை எல்லோரும் அறிவோம்

துளசிதாசர் தன்னுடைய இராம சரிதத்தில் கதைக்கு முக்கியத்துவம் கொடுக்காமல் பக்திக்கே முதலிடம் கொடுத்திருக்கிறார். இராமனை முழு முதற் கடவுளாகப் பிரத்தியட்சமாகக் காட்டுகிறார். அதுபோல் இலட்சுமணனுடைய ஆதிசேஷ அவதார மகிமையை அவனுடைய இளமையிலே வெளித்தோன்று மாறு ஒரு நிகழ்ச்சியைத் துளசிதாசர் அமைக்கிறார்.

அகலிகைக்குச் சாப விமோசனம் கொடுத்த பின் 'விஸ்வாமித்திர முனிவருடன் இராம இலக்குமணர்கள் தனுஸ்யக்ஞம் காண்பதற்கு மிதிலை செல்லுகின்றனர். அங்கு சீதையின் சுயம்வரம் சிவதனுசில் நாணேற்று பவருக்குப் பரிசாக வைக்கப்பட்டிருக்கிறது

இராவணேஸ்வரன், பாணாசூரன் போன்ற பேராற்றல் படைத்த அரக்கர்களும் பலதேசத்து இளவரசர்களும், தேவர்களும் நிறைந்திருந்த அந்தச் சபையில் வில்லின் பக்கம் யாரும் நெருங்க இயலாமலும், கையால் தூக்கவே முடியாமலும் இருப்பதைக் கண்டு ஜனகன் மிகவும் வருந்தி, 'சீதைக்குத் திருமணம் ஆகாமல் இருக்கும் நிலை வந்து விட்டதே!. இந்தப் பூமி, வீரர்கள் இல்லாது பூஜ்ஜியமாகி விட்டது' என்று சபையில் உள்ளோரை ஏளனமாகப் பேசி வருத்தமுற்றார். இதைப் பொறுக்காத, இலக்குவன், 'சத்திரிய குலத்தவர்களாகிய நாங்கள் இருப்பதை அறியாமல் பேசுகிறீர்கள்' என்று ஜனகனை எதிர்த்தான். அப்போது விஸ்வாமித்திரரும் இராமனும் இலட்சுமணனை, இங்கிதங்களால் சாந்தியடையச் செய்தார்கள்.

பின்பு யாராலும் தூக்க முடியாத தனுஸை இராமன் இமைப் பொழுதில் இரு துண்டாக ஒடித்து விட்டான். வில் ஒடிந்த சப்தம் மூவுலகிலும் எதிரொலிக்கவே, பரசுராமர் என்ற பேராற்றல் படைத்த முனிவர் கையில் சத்திரியகுல அரசர்களை வேரறுக்கும் "பரசு" என்ற மழு ஆயுதத்துடன் ஊழிக்கால அக்கினி போல் வந்து நின்றார். அவருடைய தோற்றம் மிகவும் உக்கிரமானதாக இருந்தது. அவரைக் கண்டதும் சபையிலிருந்த யாவரும் பயத்தினால் நடுநடுங்கி, ஆசனங்களிலிருந்து எழுந்து, ஒவ்வொருவரும் தத்தம் பெயரையும், தகப்பன் பெயரையும் சொல்லிக் கொண்டு பரசுராமருடைய சரணங்களில் தண்டனிட்டார்கள். ஜனக மகாராசாவும் அவருடைய பாதங்களில் விழுந்து நமஸ்கரித்தார். ஜானகியையும் அழைத்து வணங்கச் செய்தார். விஸ்வாமித்திரர் இராம இலக்குமணர்களைப் பரசுராமருக்கு அறிமுகம் செய்து, அவர் பாதங்களை வணங்கச் செய்தார்.

பரசுராமர் எல்லாவற்றையும் அறிந்தும், ஒன்றும் அறியாதவர் போல் 'இந்த வில்லை ஒடித்த மூடன் யார்'? என்று சினந்து நின்றார். ஜனக மகாராஜா பயந்து எல்லா விவரங்களையும் முனிவர்க்குக் கூறினார்.

சீதையின் தாயார், தோழிமார் அனைவரும், சுபகாரியம் கெட்டு விடுமோ? என்று பயந்து நடுங்கிக் கொண்டிருந்தார்கள். அச்சமயம் இராமன் மிருதுவான இன்சொல்லால் ஜம்புவின் வில்லை ஒடித்தவன் உம்முடைய பக்தர்களில் ஒருவனான நான்தான். தங்களின் ஆக்ஞை என்ன? என்மதை வேண்டுகிறேன் என்றார். பரசுராமர் கோபம் அடங்காமல், சிவதனுஸை ஒடித்தவன் எனக்கு சகஸ்ரபாஹுவான கார்த்த வீரியார்ச்சுனனுக்குச் சமமான சத்ரு. அவன் கூட்டத்தை விட்டுத் தனியே வந்து

நிற்கட்டும். அவன் வராவிட்டால் இந்தக் கூட்டத்தை அழித்து விடுவேன் என்று கர்ஜித்தார். இந்த வசனங்களைக் கேட்ட சர்வக்ஞனான இராமன் அமைதியின் சின்னமாகவே நின்றார். ஆனால் ஆலகால விஷத்தைத் தன்னுள் அடக்கியுள்ள இலட்சுமணன் மாயையில் தத்தளிக்கும் பரசுராமரை நன்கு அறிந்து கொண்டான். அவருக்குப் புத்தி புகட்ட நினைத்து, அவர் அவமானப்படும்படியான வார்த்தைகளைச் சொன்னான். 'நான் சிறு பையனாக இருக்கும் போது பல தனுசுகளை ஒடித்திருக்கிறேன். அப்போதெல்லாம் உங்களைப் பார்த்ததில்லையே'? என்றான். பரசுராமர் மிகவும் கோபமடைந்து, 'நீ எமலோகம் செல்ல விரும்புவதால் வார்த்தைகளை ஆராயாமல் என்னிடம் பேசுகிறாய், என்றார். இலக்குவன் சிரித்துக்கொண்டு, 'எனது அறிவிற்கு எல்லாவில்களும் ஒன்றே: இதை ஒடித்ததால் யாருக்கும் நஷ்டமில்லையே? இரகுபதி தொட்ட மாத்திரத்தில் அது ஒடிந்து விட்டது. உம்முடைய பரசுவைக் காட்டி, பாலகன் என்று என்னைப் பயங்காட்ட வேண்டாம். நான் சத்திரியன் மரணத்துக்கு அஞ்சியவன் அல்லன்' என்று கூறினான்.

பரசுராமர் மேலும் சினந்து, 'இந்தப் பரசு, கார்த்தவீரிய அர்ச்சுனனின் கரங்களை வெட்டியது. இது கர்ப்பத்தில் இருக்கும் சிசுவைக் கூட பயத்தினால் நழுவச் செய்து விடும்' என்று கூறி, விஸ்வாமித்திரரை நோக்கி, 'நீர் இச் சிறுவனைக் காப்பாற்ற விரும்பினால் என்னுடைய பெருமைகளைச் சொல்லி இவனை அடக்கும்' என்றார். இதைக் கேட்ட இலட்சுமணன், பரசுராமரை நோக்கி, 'தாங்களே நேரில் சொல்லும் பொழுது பிறர் உதவி எதற்கு? உங்கள் புகழைக் கூறியதில் திருப்தி ஏற்படாவிட்டால் இன்னொரு தடவையும் கூறுங்கள். சுத்த வீரன் வாய் வீச்சினால் தன் வீரத்தைக் காட்ட மாட்டான்.

கையிலே பரசுவை வைத்துக் கொண்டு காலனை ஏன் உரவிக்குக் கூப்பிடுகிறீர்?' என்று பரசுராமரையும் அவரிடமிருக்கும் பரசுவையும் கேவலமாகப் பேசி, இறுதியாகக் கூறுவான்—

என் முன் நிற்பவர் பிருகு வம்சத்தில் பிறந்த பார்க்கவ-ராமன். பிராமணன் என்பதால் குரோதமில்லாமல் உம் வசனங்களைப் பொறுத்துக் கொண்டேன். சூரிய குலத்தவர்கள் தங்கள் வீரத்தை இதுவரை, பசுக்களிடமும், பிராமணர்களிடமும், பாகவத உத்தமர்களிடமும், காட்டியதில்லை. நீர் மாதாப் பிதாக்களுக்குச் செய்ய வேண்டிய இறுதிக் கடன் தீர்ந்து விட்டது. பாக்கியிருப்பது குருவின் கடன் மட்டும் தான். உம்மிடம் தோஷமிருப்பதால் எங்களைச் சரியாக அறியவில்லை. நீர் பிராமணராக இருப்பதால் உம்மை நான் கொல்ல முடியாது. ஆதலால் மன்னிக்கிறேன்' என்றான். இந்த வார்த்தைகளைக் கேட்ட சபையோர்கள் எல்லோரும் 'அவமானம்' என்று கூறி சபையை விட்டு எழுந்து சென்று விட்டனர்.

உடனே இரகுபதி இராமன், இலட்சுமணனை அடக்கி பரசுராமரை அஞ்சலி செய்து கோமள வசனங்களில் பேசலானார்.

'இந்த வில்லை ஒடித்ததில் இலக்குவனுக்கு யாதொரு பங்குமில்லை, இதில் குற்றவாளி நான் தான். 'பிராமணோத்தமரே! நீங்கள் எதை வேண்டுமானாலும் என்னிடம் செய்யுங்கள். உங்கள் கையில் பரசு இருக்கிறது. என் தலை தாழ்ந்து நிற்கிறது' என்றார். பரசுராமர் தன் கையிலிருக்கிற வில், தன் கைக்கு உதவாமலிருப்பதையும், கைகள் வேலை செய்ய மறுப்பதையும் உணர்ந்தார்.

அப்போது பரசுராமர், ரகுராமனை நோக்கி தன் கையி லிருந்த விஷ்ணு தனுஸை எடுத்து நீட்டியதும், அது தானாகவே இராமனின் கைக்குத் தாவியது. அது சமயம் பரசுராமர் இராமனுடைய திருமேனியில் அண்ட சராசரங் களும் இருப்பதைக் கண்டு, தன் பிழையைப் பொறுத்தருள மன்றாடினார்.

அதன் பின்பு அயோத்தியிலிருந்து தசரதனை வரவழைத்து சீதா-இராமர் கல்யாண வைபவம் சிறப்பாக நடந்தது சீதையின் தங்கை ஊர்மிளைக்கும் - இலட்சு மணனுக்கும் திருமணம் நடந்தது.

---

## சத்துருக்கனன் சீற்றம்

---

கவிச் சக்கரவர்த்தி கம்பர் தனது காவியத்தில் சத்துருக்கனனைக் காப்பியம் முடியும் வரை பேசாத தம்பி யாகவே சித்திரித்திருக்கிறார். ஆனால் துளசிதாசர் தனது காவியத்தில் ஆதி கவி வான்மீகியை அடியொற்றி அயோத்தியா காண்டத்தில் சத்துருக்கனனுக்கு ஒரு சிறப்பான இடத்தைக் கொடுத்திருக்கிறார். அதாவது இராமன் முடி சூடுவதில் அவன் அண்ணன்மார் பரதன், இலட்சுமணன் இருவருக்கும் இருந்த ஆசையையும், வேகத்தையும்விட சத்துருக்கனனின் ஆசையும், வேகமும் சற்றும் குறைந்ததல்ல, என்பதைக் காட்டுகிறார்.

இராமனுக்குக் கைங்கரியம் செய்யவே பரதனும் இலக்குவனும் அவதாரம் எடுத்துள்ளார்கள். பகவானாகிய இராமனுக்குக் கூடவே இருந்து கைங்கரியம் செய்யும்

புண்ணியத்தை இலட்சுமணன் பெற்ருன். பரதனும் இராமனின் சாட்சாத் கைங்கரியத்தின் மகிமையைச் சதா காலமும் அனுபவிப்பதில் வெற்றி பெற்று பரம பக்தியில் ஆழ்வாராக மாறிவிட்டான். பகவானைக் காட்டிலும் பாகவதர்களுக்கே நாம் அடிமை செய்ய வேண்டும் என்ற உயர்ந்த தர்மத்தை உணர்த்துவதற்கே அவதாரம் செய்தவன் சத்துருக்கனன். இந்த நிலையில் சத்துருக் கனன் பரமபக்தனை பரதனை இளமையிலே இனம் கண்டு அவனுடைய நிழல் போலும், கைகால் வஸ்திரம் முதலிய உடைமைகள் போலும் அவனையே தரிசித்து அவனுக்கே கைங்கரியம் செய்து வரலானுன்.

மந்தரையின் சூழ்ச்சியால் கைகேயி வரம் கேட்கத் தசரதன் இராமனின் பிரிவை எண்ணிக் கலங்கித் தரை யில் விழுந்து புலம்பிச் செயலற்றுக் கிடக்கிருர். பரதனும் சத்துருக்கனனும் கேகய நாட்டிலிருந்து அயோத்திக்கு வரவழைக்கப்படுகிருர்கள். பரதன் நிகழ்ச்சிகள் யாவற் றையும் அறிந்து மிகவும் வருந்திக் கைகேயியிடம் இராமனைக் காட்டுக்கு அனுப்பும் அளவுக்குப் பாதகச் செயலைச் செய்ய எப்படி மனந்துணிந்து விட்டாய்? என்று கைகேயியிடம் கேட்டு வாக்கு வாதம் செய்து கொண்டி குந்தான். இந்தச் சம்வத்தைப் பரதனின் நிழல் போல் பின்னுல் வந்து நின்று கேட்டுக் கொண்டிருந்த சத்துருக் கனன் மனதுக்குள் மிகுந்த கோபத்துடன் கொதித்துக் கொண்டிருந்தான்.

அப்போது அங்கே பூவோடும், புதிய ஆடை யோடும் விதவிதமாகத் தன்னை அலங்காரம் செய்து கொண்டு கூனி மந்தரை வந்து கொண்டிருந்தாள். அவளைப் பார்த்ததும் எரியும் தீயில் நெய் விட்டாற்போல சத்துருக்கனன் கொதித்து எழுந்தான். அந்தக் கூனியைக்

காலால் உதைத்தான்! அவள் கதறிக்கொண்டு பூமியில் குப்புற விழுந்தாள். அவள் கூன், கபாலம், பற்கள் முதலியன உடைந்தன. வாயிலிருந்து இரத்தம் பெருகியது. அவள், "தெய்வமே! இந்தச் செயல் விபரீதமாக இருக்கிறதே! நான் இவர்களுக்கு என்ன கெடுதி செய்தேன்? மாறாக இவர்களுக்கு நான் செய்த பேருபகாரத்திற்கு நீதியான பலன் இதுதானா?" என்று கதறினாள்.

இவ் வாசகங்களைக் கேட்ட சத்துருக்னன், உச்சியிலிருந்து உள்ளங்கால் வரை விஷம் நிறைந்தவள் இவள் தான் எனத் தெளிவாக அறிந்து, மேலும் அதிகக் கோபங் கொண்டு, அவள் தலைமயிரைப் பிடித்து இழுத்துச் சென்றான்.

அப்போது கருணைக்கரசாக விளங்கும் பரதன் அவளது இழி நிலை கண்டு இரக்கமுற்று ஓடி வந்து அவளை விடுவித்தான். பிறகு இரு சகோதரர்களும் தாய் கோசலையின் மாளிகைக்குச் சென்றார்கள்.

இது ஸ்ரீவைஷ்ணவ தர்மத்தின்படி பகவானைவிட பாகவதர்களுக்கு அடிமை செய்யும் பணியின் சிறப்பை எடுத்துக்காட்டும் பொருட்டுத், துளசிதாசர் தனது இராமாயணத்தில் அமைத்துள்ள புதிய நிகழ்ச்சியாகும்.

## படகோட்டியின் பக்திப் பெருவெள்ளம்

---

நாவாய் வேட்டுவன் குகனின் பக்தி எல்லோரும் அறிந்ததாகும். அவன் பக்திக்கு ஈடாக இராமன், இராவண வதம் முடித்து இலங்கையிலிருந்து பிராட்டியை மீட்டுக் கொண்டு, நந்திக் கிராமத்தில் 14 வருடம் தவம் முடித்து, நெருப்பில் விழக் காத்திருக்கும் பரதனைச் சந்திக்கு முன்பு குகனைச் சந்தித்து, அவனுக்கு அருள்புரிந்து மீண்டதையும் எல்லோரும் அறிவோம்.

குகனை ஒத்த, அல்லது அவனையும் மிஞ்சிய இன்னொரு படகோட்டியையும், கங்கைக் கரையில் துளசி தாசர் தனது மானஸ இராமாயணம் மூலம் நமக்கு அறிமுகம் செய்விக்கிறார்.

இராமனும் சீதையும், இலக்குவனுடன் சித்திரக் கூடம் செல்லுவதற்குக் கங்கைக் கரையில் வந்து நின்றார்கள். குகன் என்ற சிருங்கி பேரத்து வேட அரசன் தன் நாவாய்க் கூட்டங்களையும் படை வீரர்களையும் இராமர் பாதுகாவலுக்கு வர உத்தரவு கொடுத்தான். அவர்களில் முதன்மையான சிறந்த ஓடக்காரன் ஒருவன். கங்கைக் கரையில் காத்து நிற்கும் இராமன் முன்பு படகைக் கொணர்ந்து நிறுத்தினான். தன் தலைவனின் மேம்பட்ட பக்தியைப் போலவே இவனும் இராமனைத் திருமாலாகவே கண்டான்.

இந்தப் படகோட்டி இராமனுடைய சாட்சாத்கார மர்மங்களை நன்கு அறிந்தவன். குறிப்பாக இராமனுடைய திருவடித் தாமரைகளின் பெருமையை நன்குணர்ந்தவன். அதாவது இராமனின் பாதத்துளி பட்டதும் எந்த ஜடப்

பொருளும் பரம ஜீவியத்தை அடைந்துவிடும். அத்தகைய பெருமை வாய்ந்த ஒரு மூலிகை என எண்ணியவன். அவன் இராமனைப் பார்த்து, "ஐயா! நீர் சாதாரண மனிதன் இல்லை; பரமாத்வான இராமன். உம்முடன் இருக்கும் பிராட்டி என்னுடைய மாதாவான மகாலட்சுமி தான். உமது பாதத் துளி பட்ட உடனே கற்பாறை ஒன்று பெண்ணுருவம் பெற்று விட்டது. என்னுடைய படகு மரத்தினால் செய்யப்பட்டது: கல்லைவிட மரம் கடினமானதன்று. ஆகவே உன் திருவடிப் பரிசத்தினால் படகு பெண்ணாக மாறிவிட்டால் என் படகு மாற்றுருப் பெற, என் தொழில் கெட்டு விடும். ஆதலால் நீர் கட்டாயம் அக்கரைக்குப் போகவேண்டுமாயின் உம் முடைய திருவடிகளைக் கங்கை ஜலத்தினால் நான் அலம்பி விடுவதற்கு அனுமதி கொடுக்க வேண்டும். அதாவது சீதாராமர் பாதங்களை நான் அலம்பி அர்ச்சனை செய்து சேவித்து என் மாசுகளைக் கழுவும் முன்பு உங்களை அக்கரைக்குக் கொண்டு சேர்க்க மாட்டேன்" என்று கூறினான்.

இவ்வளவு பக்தியில் மூழ்கித் திளைத்துக் கொண்டி ருக்கின்ற படகோட்டியின் உணர்ச்சிப் பெருக்கைக் கண்ட ஸ்ரீ ராமன், சீதையையும், இலட்சுமணனையும் புன்னகை யோடு பார்த்தார். பின்பு ஓடக்காரனை அன்போடு நோக்கி, தம் பாதங்களைக் கழுவ அனுமதித்தார். மகா பாக்கிய முடைய ஓடக்காரன் திரு விக்கிரம அவதாரத்தில் கங்கை யின் பிறப்புக்குக் காரணமாக இருந்த இராமனுடைய பாதங்களைக் கங்கையின் புனித நீரால் அபிஷேகம் பண்ணினான். பகவானுடைய பாத பரிசம் பெற்ற கங்கையும் தனது பூர்வீக ஜென்மத்தை நினைத்து மிகவும் ஆனந்தமடைந்தாள். கங்கையின் ஆனந்தத்தையும் ஓடக்காரனின் அனுராகத்தையும், ஸ்ரீ இராமனின் உற்சா

கத்தியும் கண்ட தேவர்களும் ஆனந்தித்துப் புஷ்பங்களை வர்ஷித்தார்கள்.

அக்கரைக்கு வந்ததும் குகன், இராமன், இலக்குவன் சீதை முதலியோர் ஓடத்திலிருந்து இறங்கினார்கள். கங்கையின் மணல் மேட்டில் ஓடக்காரன் இராமனின் பாதங்களில் விழுந்து வணங்கினான், இராமபிரானுக்குத் தொண்டு செய்யும் பாக்கியம் கிடைத்தது பற்றி ஆனந்தித்தான். இராமன் அவனை எழுப்பி வாரி அணைத்துக் கொண்டு கூலி ஒன்றும் கொடுக்கவில்லையே என்று வருத்தப்பட்டு நின்றார். பதியின் மனக்கருத்தை அறிந்த சீதாபிராட்டி தன்னுடைய காலில் அணிந்திருந்த இரத்தின அங்குட்டியைக் கழற்றி படகோட்டிக்குச் சன்மானமாக இராமன் கையில் கொடுத்தாள். இராமன் அதைப் பெற்று அவனிடம் கொடுத்தார். படகோட்டி தான் பலகாலம் பலருக்கு உழைத்து அடிமை செய்து வாழ்ந்ததாகவும் இன்று விதிவசமாக இல்லறப் பாக்கியத்தையும் அடைந்துவிட்டதாகவும் கூறி அதைப் பெற மறுத்து விட்டான்.

ஆனால் இராமன், சீதை, இலக்குமணன் ஆகியோர் மீண்டும் முயற்சி செய்த போது ஓடக்காரன் 'தாங்கள் வனவாசம் முடித்து வரும் சமயம் எதைக் கொடுப்பீர்களோ, அதை அப்போதே நான் சிரமேற்கொண்டு மிக்க மகிழ்ச்சியோடு பெற்றுக் கொள்வேன்' என்று பதில் அளித்தான்.

இந்தச் சிறு கதை எந்த இராமாயணத்திலும் சொல்லப்படாத ஒன்றாக இருந்தாலும், துளசிதாசர் தம்முடைய இராம பக்திப் பெருக்கினால் தலைவனை விஞ்சிய சீடனின் பக்தி ஒன்றை மிகவும் நயமாக எடுத்துக் காட்டியிருக்கிறார்.

---

## சித்திர கூடத்தில் இராமன் கைகேயியைச் சந்தித்தல்

---

கானகம் சென்ற இராமனைத் திரும்ப அயோத்திக்கு அழைத்து வரும் பொருட்டுப் பரதன், வசிட்டர், சுமந்திரர், தேவியர் மூவர், மற்றும் அயோத்தி மக்கள், எல்லோரும், காடு கடந்து, கங்கை கடந்து, கடைசியாகச் சித்திர கூடத்தில் இராமன் இருக்கும் இடம் வந்து சேர்ந்தார்கள். இராமன் வனவாசம் சென்றதை அறிந்து ஜனக மகாராஜனும் மனைவி சுனயனவுடன் அங்கு வந்திருந்தார். அங்கு வந்திருந்த எல்லோரையும் கருணை கொண்டு அன்பு உபசாரம் பண்ணக் கருதிய இராமன், ஒவ்வொருவருக்கும் உரிய அளவில் ஆசனம் அளித்து வரவேற்றார். எப்படி ஒரே சூரியன் கோடிக்கணக்கான பாத்திரங்களில் இருக்கின்ற தண்ணீரில் பிரதிபலிப்பானே அப்படியே இராமனும் அங்கு வந்துள்ள ஒவ்வொருவருடைய முன்னிலையிலும் தனித்தனியே ஒரே நேரத்தில் காட்சி அளித்தார்.

பரதன் பக்கத்தில் மிகவும் துக்கத்தோடு கண்ணீர் விட்டுக் கொண்டிருந்த சிற்றன்னை கைகேயியைத் தேற்றுவதற்காக அவள் முன் இராமன் தன்னுடைய விஸ்வரூபத்தைக் காட்டி மிக்க இனிமையுடன், "இந்த வனவாசம் ஹரி பகவான் ஆணைப்படியும் விதிவசத்தாலும் நடந்ததே தவிர தாங்கள் காரணமில்லை" இராவணாதி அரக்கர்களை அழிப்பதாக முன்னமே தீர்மானித்தபடி சீதையோடு தான் மனித வடிவில் இங்கு வந்திருப்பதாகவும் வெளிப்படையாகக் கூறி, கைகேயின் மனத்தில் தோன்றிய அசுபமான பயத்தையும் போக்கி அவளை ஆஸ்வாசப்படுத்தினார்.

---

## இந்திரன் மகன் ஜயந்தன் காக்கை வடிவில் வந்து பிராட்டியின் பாத சரணங்களைத் தீண்டுதல்

(இராமனைத் துளசிதாசர் தன்னுடைய இராமாயணம் முழுவதிலும் பரம் பொருளாகவே வெளிப்படையாகக் காட்டிச் செல்லுவார்.)

வேதங்களாலும், விற்பனர்களாலும் வரையறுக்க இயலாத கடவுள், தன் சொருபத்தை மறைத்து மானிட உருவெடுத்து, பல அற்ப குணங்களுக்கும் இலக்கானவர் போல் நடித்து முடிவில் பரதந்தரனுகப் பரிணமிப்பதே இராம சரிதம்.

ஜகத் வியவகாரங்களில் விஷ்ணுவுடன் சேர்ந்திருந்த மகாலெட்சுமி பூலோக அவதாரத்திலும், சீதா இராம தம்பதிகளாகச் சேர்ந்தே நடிக்கிறுர்கள்: ஆதலால் பிராட்டியின் சமத்துவ அந்தஸ்துக்கும் அதிகாரத்துக்கும் கவிக் கூற்ருகக் கூட எவ்வித குறைவும் ஏற்படாமல் துளசி தன்னுடைய இராமாயணத்தை எழுதுகிறுர்.

தேவேந்திரன் மகன் ஜயந்தன் பஞ்சவடியில் வசிக்கும் சீதாராமரிடம் வருகிற நோக்கத்தை ஆதிகவியும் கவிச்சக்கரவர்த்தியும் ஒரே பார்வையில் பேசுகிறுர்கள். அதாவது, பஞ்வடியில் இலட்சுமணன் காய்கனி கொண்டு வரும் பொருட்டுச் சற்றுத் தள்ளிப்போய் இருந்தான். இந்திரன் மகன் ஜயந்தன் பிராட்டியின் உடலழகில் மோகங்கொண்டு புலன் இச்சையில் தேவியின் மார்பைத் தொட்டான் என்று கூறுகிறுர்கள். இந்தஅபசாரத்தினுல் இராமனின் கண்நோக்காற்றலுக்குத் தப்ப இயலாத ஜயந்தன், மூவுலகும் திரிந்து அபயமின்றி இறுதியில் இராமனையே சரண் அடைந்தான். சிறிய புல் நுனிக்கு இலக்காகக் கண்ணையுமிழந்தான்.

துளசிதாசர் இந்த இடத்தை முற்றிலும் வேறு விதமாகக் காண்கிருர். ஜயந்தன் என்பவன் தேவேந்திரன் மகன். இவன தன் தந்தை சம்பராசன் என்ற அசுரனைப் போரில் வெல்ல முடியாதிருந்ததையும் தசரதச் சக்ரவர்த்தி வந்து சம்பராசுரனை வென்று இந்திரனுக்கு ஆட்சியை நிலை நிறுத்தி மீண்டதையும் அறிந்திருந்தான். சக்ர வர்த்தி திருமகனுன இராமனுடைய பெருமையை ஜயந்தன் கேள்விப்பட்டிருந்தும் அவனை வெறும் இராச குமாரன் என்றே நினைத்தான். அவன் ஆற்றலில் அழுக்காறு கொண்டு, அவன் உடல் வலிமையைப் பரீட்சிக்க எண்ணி பூலோகம் வந்து காக்கை வடிவம் எடுத்து பஞ்சவடியை அடைந்தான். இந்த முயற்சியானது எறும்பு ஒன்று பெருங்கடலை ஆழம் பார்க்க இறங்குவது போலிருக்கிறது என்று பேசுவார் துளசிதாசர்.

பஞ்ச வடியில் இராமனும் சீதையும் தனியே அமர்ந்து மகிழ்வோடு பேசிக் கொண்டிருந்தார்கள். அப்போது தன் மந்த புத்தியினுல், காக்கை வடிவம் கொண்டது இராமனுக்குத் தெரியாது என நினைத்த, சயந்தன், சீதா பிராட்டியினுடைய கோலமிட்ட பாதங் களில் நூபுரமணிந்த விரல் நுனியில் சிரம் தாழ்ந்து கொத்தி நின்ருன். குருதி வெளிப்பட்டது. சர்வ ஞான முள்ள இராமன், கணப்பொழுதில் நிகழ்ச்சிகளைத் தன் மெய்யுணர்வால் அறிந்து கொண்டார். ஜயந்தனின் செருக்கை அழிக்க ஓர் அம்பை வில்லில் பொருத்தி அவன் மீது ஏவினர். அம்பு அவனைத் துரத்தவே ஜயந்தன் தன் உயிரைக் காக்கும் பொருட்டுத் துணை நாடிப் பதினுன்கு உலகங்களுக்கும் காக்கை வடிவில் ஓடினுன். யாருடைய துணையும் கிடைக்காமல் போக, இறுதியில் இராமனையே வந்து சரணமடைந்தான். எந்தப் பெரிய பாவத்தையும் செய்து விட்டு, "அடைக்கலம்" என்று வந்து சரண்

அடைந்தவர்களை ஆதரிக்கும் வள்ளலாகிய இராமன் சயந்தனையும் மன்னித்து அவனுக்கு உயிர்ப்பிச்சை அளித்தார்.

சிறந்த இராம பக்தரான துளசிதாசர் தாம் வணங்கும் திருமாலிடம் உறையும் மகா இலட்சுமியின் பெருமைக்கு அணுவளவும் களங்கம் ஏற்படாதவாறு மிக்க நயமாக இந்த இடத்தை மாற்றி அமைத்தமை மிகவும் போற்றத்தக்கதாகும்.

---

## பஞ்சவடியில் இராமர் சீதையிடம் சில இரகசியங்களைக் கூறுதல்

---

வான்மீகி மகரிஷியின் புகழைப் பேச வந்த கவிச் சக்கரவர்த்தி கம்பன் அவனைத் 'தெய்வமாக் கவி' என்று கூறி அஞ்சலி செய்தார். அவருடைய தெய்விகக் காவியத்தில் அமைந்த வானுயர்ந்த கற்பனைகளைச் சிற்சில இடங்களில் சில மாற்றங்கள் செய்துள்ளார். காரணம்-காலத்தால் மிகப் பழமையான கருத்துக்களைத் தமிழ்ப் பண்பாட்டுக்கு ஏற்ப மக்களுக்குக் கதையைப் புரிய வைக்கும் நோக்கமேயாகும்.

பல நூற்றாண்டுகளுக்குப் பின் வந்த வடநாட்டுக் கவி துளசிதாசர், ஆதி கவியின் தெய்விகக் கருத்துக்களினின்று ம்அணுவளவும் விலகாமல், வருணனைக்காகவாவது; கவிக் கூற்றுக்காகவாவது கருத்துப்பிறழாமல், காவியம் செய்திருப்பது தனிச் சிறப்பாகும்.

துளசிதாசர் தன் மானஸ இராமாயணத்தில் ஆரணிய காண்டத்தில் ஒரு உத்தியைக் கையாண்டிருக்கிருர். இந்த உத்தியானது இராம அவதாரத்தின் மகிமையைக், காவியம் செய்வதில் மேற்படி இரண்டு பெரும் கவிகளேயும் மிஞ்சி விட்டது என்ருல் அது மிகையாகாது.

பரத்துவத்தில், இராமனைப் போல் பிராட்டிக்கும் சமத்துவ அந்தஸ்தும் அதிகாரமும் இருக்கின்ற காரணத்தால், வான்மீகி பகவான் தனக்கு (நாரத மகரிஷியால் சொல்லப்பட்ட) இராமாயணத்தை "சீதாயாஸ் சரிதம் மஹத்" என்று கூறினர். இந்தக் கொள்கை அடிப்படையில் அந்தத் தரும நெறிக்கு அணுவளவும் பங்கம் ஏற்படாது கதை அமைப்பதே ஏற்புடைத்து. இந்த வழியில் உறுதியாய் நிற்கிறபடியால் சீதாப்பிராட்டியை ஒருவன் தூக்கிச் செல்லவும் அவளை மனைவியாகக் கொள்ள முயல்வதுமான நிகழ்ச்சிகளை மனதில் நினைப்பது கூட அபசாரம் என்று நினைக்கிருர் இராம பக்தரான துளசிதாசர்

அவர் தனது இராமாயணத்தில் மகாவிஷ்ணுவின் முழுத் தோற்றத்தையும் இராமன் உருவத்தில் காட்டிச் செல்கிருர். இந்த முயற்சியில் வெற்றி அடைவதற்காக ஒரு நல்ல சந்தர்ப்பத்தில் ஒரு புதிய கருத்தைக் கதையின் நோக்கத்திற்கும், தான் இயற்றிய காவியத்தின் பக்திக்கும் குறைவு இல்லாமல் செய்திருக்கிருர். அதாவது உண்மையான சீதையை நெருப்பில் மறைந்து கொள்ளச் செய்து, மாயா சீதையாகத் தன்னுடைன் இராவணவதம் நிறைவேறும் வரை இருந்து வருமாறு சீதைக்குப் பணித்ததாகக் காட்டுகிருர்,

தண்டகாரணியத்தில் பஞ்சவடியில் சீதையும் இராம இலட்சுமணர்களும் வனவாசம் செய்யும்போது, இராவணன் தங்கை சூர்ப்பநகை தனியே நின்ற இராமனிடம், வந்து, தன்னைத் திருமணம் செய்யுமாறு வேண்டினாள். அவள் எண்ணம் நிறைவேறாது போக, சினமுற்றுச் சீதையைத் தூக்கிச் செல்ல முயன்றாள். இதன் விளைவாக இலட்சுமணன் சூர்ப்பனகையின் காதையும், மூக்கையும் அரிந்தான். இதனால் கோபமுற்ற அரக்கி, தன் மாமன்மார் கர, தூஷணர் இருவரையும் இராமலட்சுமணர்களை ஒழித்து வர ஏவினாள். அவர்களோடு பெரும் போர் மூண்டது. இராமன் சீதையை ஒரு குகையில் வைத்து இலட்சுமணனைக் காவல் புரியுமாறு நிறுத்திவிட்டுத் தான் ஒருவனாக நின்று கோடி அரக்கர்களையும் அழித்தார்.

அவமானப்பட்ட சூர்ப்பநகை தன் அண்ணன் துணைநாடி இலங்கைக்குச் சென்றாள். இலக்குவன் காய், கனிகள், கிழங்குகள் கொண்டு வர சற்றுத் தள்ளிக் கானகத்திற்குள் சென்றிருந்தான். அப்போது சீதையும் இராமனும் தனித்திருந்தார்கள். ஸ்ரீ இராமச்சந்திரன் நடந்த பெரும் போரைக் கருத்தில் எண்ணியும், அடுத்து வரவிருக்கும் இராவண வதத்தை எதிர்பார்த்தும் தனது கடமையை நிறைவேற்றும் காலம் சமீபித்து விட்டது என்றும், தேவர்களுக்குக் கொடுத்த வாக்குறுதிப்படி அரக்கரை அழித்து இராவணனை வதம் செய்து, தனது கடமையை நிறைவேற்றும் சமயம் வந்துள்ளது என்றும் தீர்மானித்து அதனால், இராவண வதம் நிறைவேறும் வரை அக்கினியில் தன்னை மறைத்துக் கொண்டு மாயா சீதையாகத் தன்னோடு வரும்படியும் பிராட்டியிடம் கேட்டுக்கொண்டார். அப்படியே தேவியும் அக்கினிக்குள் தன்னை மறைத்துக் கொண்டு அதுமுதல் மாயா சீதையாக இராவணவதம் முடியும் வரை நடந்து கொண்டாள்.

இந்த மாயா சீதையைத் துளசிதாசர் பஞ்சவடியில் வைத்து உண்மையான சீதையிடமிருந்து பிரித்து வேருன ஒரு மாய உருவத்தைத் தாங்குமாறு அமைத்துள்ளார். இராம கதையில் சீதையினுடைய பாத்திரத்தைப் பலவாருகப் பல்வேறு புலவர்கள் சித்தரித்து இருக்கிருர்கள். பிராட்டியின் பரத்துவம் அணுவளவும் குறையாமல் இராம அவதார நோக்கம் நிறைவேறுவதற்கு இராமனேடு இணைந்து நடிக்க வேண்டிய காரணத்திற்காக இந்த மாய உருவம் சீதைக்குக் கொடுக்கப்பட்டது.

இந்த மாற்றம் வேறு எந்த இராமாயணத்திலும் காணப்படவில்லை. தமிழ் நாட்டுப் பண்பிற்கேற்பத் தமிழில் காவியம் செய்த கவிச்சக்கரவர்த்தி கம்பர், பல நயமிக்க நாகரிகமான பண்புகளை அமைத்திருக்கிருர். எனினும் சீதாபிராட்டியிடம் காமுகன் இராவணன் ஆசை வார்த்தைகளைப் பேசி அவள் இருந்த பர்ணசாலையுடன் தூக்கிச்சென்று தன்னுடைய காவலில் சிறை வைத்தான் என்றும் அவளைப் பற்றிய எண்ணங்களைத் தன்னுடைய இருதயக் குகையிலும் நிரப்பிக் கொண்டான் என்றும் அறிகிருேம். இந்த அபசாரம் சீதாபிராட்டிக்கு ஏற்படலாகாது என்றே துளசிதாசர் மாயா சீதையைப் படைத்திருக்கிருர்.

இராம கதையில் இராம இராவண யுத்தம், அரக்கர்களின் அழிவு, இராவணனின் சூழ்ச்சி முதலியவற்றுக்குச், சீதையின் சிறைவாசம் மிகவும் அவசியமாகிறது. ஆயினும் இந்த நிகழ்ச்சி, இராமனைத் திருமாலாகக் கொள்ளும் பக்தர்களுக்குத் தாங்க முடியாத ஒன்ருகி பலவிதமான ஐயவினுக்களுக்கு இடம் கொடுக்கிறது. அதாவது சீதை மகாலெட்சுமியாக இருந்தால் அவளைப் பிறன் ஒருவன் இவ்வாறு செய்ய முடியுமா? என்பதும் அவற்றுள்

ஒன்றாகும். அவ்வாறிருக்க எவ்விதச் சந்தேகமும் எழாத வகையில் துளசிதாசர் மேற்கண்ட உத்தியைக் கையாண்டிருப்பது மிகவும் பாராட்டுதற்குரியது.

இந்த மாயா சீதைதான், மாயமானைக் கண்டு வியப்புற்று, இராமரிடம் அதைத் தனக்குப் பிடித்துத்தர வேண்டுமென்று அடம்பிடித்தாள். இந்த மாயை தான் இளையபெருமாளிடம் கடுஞ்சொற்களைப் பேசி இராமனைத் தேடிப் போகும்படியும் விரட்டினாள். இவள் தான் முனி வேடம் தரித்து வந்த இராவணனுக்கு ஆசனம் கொடுத்து வரவேற்றாள். இந்தச் சீதையைத்தான் இராவணன தூக்கிச் சென்று பத்து மாதம் சிறையில் வைத்திருந்தான். இந்த மாயா சிதையைத்தான் இராமன கடிந்து, தனக்கு மனைவியாக இருக்கத் தகுதியற்றவள் என்று துறந்தான். இவள் தான், நெருப்பில் இறங்கி எரிந்து போனாள். அப்போது நெருப்பில் அது காறும் மறைந்திருந்த நிஜ சீதை வெளித் தோன்றி இராமனோடு சேர்ந்து அயோத்திக்கு வந்து ஆயிரம் வருடம் வாழ்ந்தாள்.

---

## ஆஞ்சநேயரின் இலங்கைத் தூது

---

கிஷ்கிந்தா காண்டத்தில், இராமாயணத்தின் முக்கிய கதாபாத்திரம் ஆஞ்சனேயர். சீதாராமரின் அவதார நோக்கத்திற்கு உதவுவதற்காகவே இவரும் அவதரித்திருக்கிறார் இராமன் தனது மனக் கோவிலில் ஆட்சி செய்யும் சீதாபிராட்டியை ஸ்வதந்திரமாக இழந்து தேடி அலைகிற சமயம் அனுமன் வந்து சேருகிறார். அவர் இராமனின் பெருங்காரியத்தைத் தன் தலைமேல் ஏற்றுக் கொண்டார்

பகவானைப் போலவே பிராட்டியின் சர்வ பரத்து வத்தை நினைவில் கொண்டு, பராசக்தியின் கிருபையை நாடி சர்வலோக ஜீவன்களும் ஓடி அலைவது போல, மனோ வேகத்தில் பெரும் சாகரத்தைத் தாண்டி அனுமான் இலங்கை வந்தடைந்தார். பல இடையூறுகளைத் தாண்டி தேவி இருக்கும் இடத்தை அடைந்த பின் தேவியின் கிருபையையும் ஜீவனின் பக்த இலட்சணங்களையும் மேன் மேலும் அதிகரிப்பதற்காகத் துளசிதாசர் முன் காவியங் களிலிருந்து சில மாறுதல்களை அமைத்துள்ளார்.

ஆஞ்சனேயர் இலங்கையில் அகன்ற ஒரு துளசித் தோட்டத்தில் வந்து இறங்கினர். அங்கே, துளசி பிருந்தா வனங்களைப் பார்த்ததும், ஆஞ்சனேயர் மிகவும் மகிழ்ச்சி அடைந்தார். அந்தத் துளசி வனத்தின் கடைசியில் வீடணனின் அழகான மாளிகை இருந்தது. அந்த அரண் மனையின் பக்கத்தில் விஷ்ணு பகவான் கோயில் ஒன்றும் இருந்தது. அங்கு இராமச்சந்திரனின் இரம்மியமான சித்திரங்கள் பல நிறைந்திருந்தன. அனுமார், இராட்ச தர்கள் வாழும் இந்த இலங்கையில் இப்படிப்பட்ட நல்ல தோற்றங்கள் இருக்க முடியுமா? என்று மனதிற்குள் தர்க்கம் பண்ணிக் கொண்டு இருந்தார். அது சமயம் அங்கு இராம நாமத்தை மந்திரமாகக் கொண்டு வாழ்ந்து வந்த வீடணன் நித்திரையிலிருந்து "ராம் ராம்" என்று ஜெபித்துக்கொண்டு எழுந்து வந்தார். அனுமார் பிராமண வேஷம் தரித்துக்கொண்டு ஹரிபக்தனை வீடணனை சந்தித்தார். வீடணன், ஆஞ்சனேயரை வணங்கிக் கூற லானர்; "ஸ்வாமி உம்மைக் கண்டதும் என் மனம் மகிழ்ச்சியில் துள்ளுகிறது. உம்மிடம் எனக்குப் பிரேமை அதிகரிக்கிறது. உம்மைப் பார்த்தால் கருணாமூர்த்தியான இராமன் வலுவில் என்னை ஆட்கொள்ள வந்திருப்பது போல் தெரிகிறது. நீரும் இராமனின் பக்தர்களில்

ஒருவரா?" என்று பலவாறு கூறி, அவரிடம் பிரயாணம் வந்த காரியத்தைக் கூறுமாறு கேட்டார்.

அனுமார் தான் வந்த காரியத்தையும் இராமனுடைய சகல விருத்தாந்தங்களையும் சொல்லி தன் பெயரையும் சொன்னார். அது சமயம் வீடணன், அனுமாரிடம் தன்னுடைய ஹரி பக்தியையும் இராட்சசர்களுடைய நிலைமையையும் ஜனக புத்திரியான சீதை இருக்கின்ற இடத்தையும், அவள் இராமனை எதிர்பார்த்து இருக்கும் அவஸ்தையையும், அவள் உதவிக்குத் திரிசடை இருப்பதையும், சீதையைக் காண்பதற்குரிய உபாயங்களையும் சொன்னார். அனுமான் பிராமண வடிவை விட்டு விட்டுப் பழையபடி சிறிய வானர உருவம் கொண்டு சீதையைக் காணச் சென்றார். அசோக வனத்தில் தேவி இருப்பதைக் கண்டு மீண்டு வந்து இராமனுக்குச் சொன்னார்.

ஆதிகவியும், கவிச் சக்கரவர்த்தியும், அபாரமான கவிதைகள் செய்து இலங்கையில் இராவணனுடைய அந்தப்புர அழகையும் அங்கு இருந்த பல்வேறு மாந்தர்களின் பல்வகை வாழ்க்கையையும் வானுயர வர்ணித்துள்ளார்கள். இவற்றை எல்லாம் ஒதுக்கி விட்டு இராம கைங்கரியத்தில நெடும் பயணம் செய்து சீதை இருக்கும் இடம் வந்தடைந்த பின்னும் கஷ்டங்கள் அதிகரிக்காமல், விரைவில் பிராட்டியைக் காணும்படியான மாற்றங்களை செய்துள்ளார் துளசிதாசர்.

கல்லாத கலையும், வேதக் கடலுமே என்ற அறிவும், நலவியாகரண பாண்டித்தியமும், நைஸ்டிக பிரம்மாச்சரியமும் கொண்டவன் அனுமன். அவன் இராவணனுடைய அரண்மனை அந்தப்புரத்தில் நுழைந்து தேவமகளிரும் கண்ணயர்ந்து கொண்டிருந்த நிலையில்

சீதையைத் தேடித் துருவி அலைந்த நிகழ்ச்சிகளைத் துளசி தாசர் முற்றிலுமாக விட்டு விட்டார். குறிப்பாக இராவணன் மனைவி மண்டோதரியைக் கண்டு சீதை தான் என சில விடைகள் ஐயம் கொண்டு திகைத்துக் கொள்வதையும் தவிர்த்து விட்டது, சகுணப் பக்தியின் சிறப்பேயாகும். இங்கு வீடணனின் இயற்கையான ஹரி பக்தியையும் ஆஞ்சநேயரின் ஞான தீட்சண்யத்தையும் சிறப்பாக எடுத்துக் காட்டியிருக்கிறார்.

---

## இராவணனின் தூதர்கள் (ஒற்றர்கள்)

---

வீடணன் இலங்கையை விட்டு வெளியேறி இராமனைச் சரண் அடைந்தபின், இராமனுடைய வானரப் படையின் பலத்தை அறிந்து வந்து சொல்வதற்காக, நீதி சாஸ்திரத்தில் நிபுணர்களான சில ஒற்றர்களை இலங்கையிலிருந்து இராவணன் அனுப்பி வைத்தான். அவர்களில் முக்கியமானவன் சுகன். இவன் முன் ஜென்மத்தில் அகஸ்திய முனிவரால் அரக்கனாகச் சபிக்கப்பட்ட ஒரு முனிவர்.

இந்த ஒற்றர்கள் எல்லோரும் வானர வேடம் தரித்துக் கொண்டு இராமனை வந்தடைந்த போது இராமனின் பாத்வசேஷ குணத்தை நேரில் கண்டு அதில் கரைந்து, பக்தியில் ஆழ்ந்து, வந்த வேலையை மறந்து விட்டனர். இராம பக்தி அவர்களிடம் மென்மேலும் வளரவும், அவர்களின் மாய ரூபம் தாமாக மறைந்து, அவர்களின் இயற்கையான அரக்க ரூபம் வெளித் தோன்றிற்று. உடனே இவர்களை ஒற்றர்கள் என்று வானரக்

கூட்டம் கண்டு பிடித்து, கட்டி இழுத்து சுக்கிரீவனிடம் கொண்டு சேர்த்தனர். சுக்கிரீவன் அவர்கள் அங்கங்களை வெட்டி, இலங்கைக்கு அனுப்பிவிடச்சொல்லவும், வானரர் கள் அவர்களை அடித்துத் துன்புறுத்தினர்கள். துன்பப் பட்ட ஒற்றர்களின் அவலக் குரலைக்கேட்டு இலக்குவன் அங்கு வந்தார். இலக்குவன் அவர்கள் மீது இரக்கம் கொண்டு அவர்களை விடுவித்து ஒரு கடிதம் எழுதி, அதை அவர்களின் மூலம் தசமுகனிடம் கொடுக்குமாறு அனுப்பி வைத்தான்.

அதில்,"மூடனே! நீ இராமனை யார் என்று அறியா மலிருக்கிருய்? சீதையை இராமனிடம் ஒப்புவித்துவிடு. இல்லாவிடில் நீ சிவன், பிரம்மா, விஷ்ணு மூவரிடமும் தஞ்சம் அடைந்தாலும் நீ மீள முடியாது, இராம பாணத் தால் நீ மரணமடைவது திண்ணம்," என்று எழுதப்பட்டி ருந்தது. இராவணன் மந்திரிகள் மூலம் அக்கடிதத்தைப் படித்து விட்டு, சுகனிடம் நேரில் கண்ட உண்மை களனைத்தையும் உரைக்குப்படிப் பணித்தான். சுகன் கூறினன்:—

வீடணன் எப்போது இராமச்சந்திரனைச் சரண் அடைந்தானே அப்போதே இராமன் அவனுக்கு!இலங்கா இராஜத் திலகத்தை அணிந்து விட்டான். எங்களை வானரர்கள், இராவணன் தூதர்கள் என்று இனம் கண்டு மிக்க துன்பப் படுத்தினர்கள். அப்போது நாங்கள் இராமன் பெயரைச் சொல்லித், துன்பம் செய்யக் கூடாது என்று வேண்டிக்கொண்டோம். அதனல் அவர்கள் எங் களை விட்டு விட்டார்கள். இராமனுடைய பலத்தை நூறு கோடி முகங்களால் கூட வர்ணிக்க இயலாது. அங்குள்ள கரடிகளிலும் வானரங்களிலும், நம் ஊருக்கு வந்த வானரம் மிகச் சிறியது. வானரர்களின் எண்ணிக்கையை

யாராலும் அளந்து அறிய முடியாது. நளன், நீலன், சாம்பவான், முதலிய வீரர்கள் யானை போன்ற பலம் கொண்டவர்கள். மூன்று லோகங்களையும் அவர்கள் எளிதில் வென்று விடுவார்கள். அங்கு இருக்கும் பத்துக் கோடி வானரங்களில் ஒன்றைக் கூட யுத்தத்தில் ஜெயிக்கக் கூடியவர்கள் இங்கு இல்லை என்பதை நாங்கள் தெளிவாக அறிந்தோம். இராமன் இவர்களின் இரட்சணப் பொறுப்பை நேரில் ஏற்றுக் கொண்டிருக்கிருன். இராமனுடைய அம்பு மழையில் நாம் அனைவரும் அழிவது உண்மை. ஆதலால் சீதையை இராமனிடம் சேர்த்து விட்டு அவனைச் சரணடைவது தான் ஒரே வழி.

இந்த வசனங்களைக் கேட்ட இராவணனுக்குக் கோபம் அதிகரித்து விட்டது. சுகன் மிகவும் பயந்து, வீடணனைப் போன்று இராவணனை வணங்கி அவ்விடம் விட்டு அகன்று, இராமன் கிருபையை நாடி விரைந்து சென்ருன் அப்போது இராம நாமத்தின் மகிமையால் சுகன் தன்னுடைய சாபம் விமோசனம் பெற்று பழைய முனி உருவம் அடைந்து தனதுஇருப்பிடம் அடைந்தார்.

---

## மண்டோதரி இராவணனுக்கு இடித்துரைக்கும் மணிவாசகங்கள்

---

இலங்கையில் அரும் பெரும் செயல்களைச் செய்து வெற்றியுடன் திரும்பினுன் முதல் தூதன் அனுமன். பெரு மகிழ்ச்சி கொண்ட இராமன் மறுபடியும் வானரர்களை அழைத்து ஆலோசனை செய்து, ஜாம்பவான் எண்ணம் போல் வாலிபுத்திரன் அங்கதனைத் தூது அனுப்பினுர்.

இலங்கை வீதியில் விளையாடிக் கொண்டிருந்த இராவண குமாரன் பிரகஸ்தனை அங்கதன் சந்தித்துப் பேசினான். இவர்கள் வாக்குவாதம் முற்றிப், பெரும் சண்டையில் முடிந்தது. காரணம் ஒருவருக்கொருவர் பெரும் பலசாலிகள். இருவரும் யௌவன வயதினர். போரில் பிரகஸ்தன் இறந்தான். இதனால் இலங்கை நகரம் முழுவதும் துக்கத்தில் ஆழ்ந்தது. பழைய குரங்கு மீண்டும் வந்து விட்டதென்று எல்லோரும் கலங்கினார்கள். அங்கதன் தன் வருகையை இராவணனுக்கு அறிவித்து இராஜ சபைக்குச் சென்று ஆசனத்திலமர்ந்தான். சிங்கக் குட்டி ஒன்று மதயானைக் கூட்டத்தில் விளையாடுவது போல் அங்கதன் பேசிய வார்த்தைகளைக் கேட்டு, இராவணன் சினம் கொண்டான். இறுதியாக அங்கதன் சபையோரைப் பார்த்து "எவனொருவன் தன் கால்களில் ஒன்றைப் பூமியிலிருந்து நகர்த்தி விட்டால், தானும் தன்னைச் சேர்ந்த அனைவரும் தோல்வியை ஒப்புக் கொண்டு போய் விடுவோம்" என்று சபதம் செய்தான். இந்திரசித்து போன்ற இலங்கையிலுள்ள அரக்க வீரர்கள் அனைவரும் முயன்றும் தோல்வியையே கவ்வினர். இராவணனும் முயன்று அதையே சந்தித்தான்.

அங்கதனின் செயலும், வீரசபதமும், அரக்கர்கள் தோல்வியும், இராவணனை வெட்கித் தலைகுனியச் செய்தன. அதனால் அவன் மரணபயம் அடைந்தவன் போல் வருந்தி; சாந்தி பெறுவதற்காக அந்தப்புரம் அடைந்தான். அவனுடைய உண்மையான நிலையை அறிந்த அறிவுக் களஞ்சியமான மண்டோதரி அவனை ஆஸ்வாசப்படுத்திக் கூறலானாள்:— எவ்வித அபசாரத்தை ஒருவன் செய்தாலும் அவனை மன்னிக்கும் கருணையுள்ளவன் இராமன். முழுமுதற் கடவுள் இராமனாக வந்திருக்கிறான். அவனை யாரும் வெல்ல இயலாது. அவனைச் சரணடைவதே உய்யும் ஒரே மார்க்கம்.

1. நீர் நினைக்கிறபடி இராமனும் இலட்சுமணனும் நமக்கு விரோதிகள் அல்லர். இராமனுடைய ஒவ்வொரு முயற்சியும் உம்மைத் தனது பக்கம் அணைத்துக் கொள்ளும் உபாயமாகவல்லவோ இருக்கிறது! அவர்களோடு யுத்தம் செய்ய வேண்டுமென்ற பிடிவாதத்தை முற்றிலும் விட்டு விடுங்கள். உம்மிடம் இப்போது ஏற்பட்டிருக்கும் மரணபயம் காரணத்தால் நீர் அவருடன் யுத்தம் செய்வதற்கு யோக்கியரல்லர் என்பது தெளிவாகத் தெரிகிறது.

2. சமுத்திரத்தைப் பந்தனம் செய்து. வானரர்கள் சகிதம் அவர்கள், சுவேலமலை உச்சியில் வந்திருக்கிறார்கள். இது சாதாரணமாக நடக்கக் கூடியதா? இராமன் எல்லோரிடமும் கருணை மயமாக விளங்குகிறான். உம்மை மீட்க விரும்பி, தூதர்களை அனுப்பி ஹிதம் செய்ய விரும்புகிறார். பரம அபராதிகளுக்கும் கருணை செய்யும் இராமனின் அன்பு மனத்தினைப் புரிந்து கொள்ளுங்கள் சுவாமி!

அங்கதனும் அனுமனும், அந்தப் பிரபுவின் சேவகர்கள். அவர்கள் அதை அறிவிக்கவே வந்திருக்கிறார்கள். அவர்கள் இராஜ சபையில், இராமனுடைய கீர்த்திப் பிரபாவங்களை நிலைநாட்டி உங்கள் அனைவருடைய செருக்குகளையும் அழித்துப் போயிருக்கிறார்கள். தசரத புத்திரனை மானிடன் என்று அடிக்கடி சொல்லி ஏமாந்து போகாதீர்கள்.

3. சுய அபிமானம், குரோதம், மமதை. அகங்காரம் ஆகியவற்றை அத்தனைத் தலைகளிலும் சுமந்து கொண்டிருக்கிறீர்கள்! இவைகள் எல்லாம் நன்மை தருபவையல்ல தர்மாத்மாவான இராமனைக் காலன் என்று நினைத்துப் பகைக்க வேண்டாம்.

மிருத்யு (மரணம்) என்ற காலன் ஒருவனைக் காரண மின்றித் தண்டம் கொண்டு அடிப்பதில்லை. எவனுக்கு மிருத்யு சமீபத்திலிருக்கிறதோ அவனுக்குப் பிரேமை யாகிற மரணபயம் ஏற்படும். நீர் இப்போது அந்த நிலையிலிருக்கிறீர்.

கைவைத்தியத்தில் தீராத நோய்க்கு அறுவை சிகிச்சை தேவைப்படுவது போல், ஆணவத்தில் இருக் கும் இராவணனுக்கு அன்பு மனைவி பிரயோகிக்கின்ற சொல் ஆயுதங்கள் பின்வருவன:-

1. சீதா அபகரணத்தின் போது இலக்குவன் சீதையைக் காப்பாற்றும் பொருட்டு ஒரு கோடு தன் தனுஸினால் கீறி, அதைத் தாண்டி வரக்கூடாது என்று சீதைக்குக் கட்டளையிட்டிருந்தான். அந்தக் கோட்டைத் தங்களால் தாண்டமுடியவில்லையே! சீதையல்லவோ அந்தக் கட்டளையை மீறி, கோட்டைத் தாண்டி வந்து உமக்குப் பிச்சை போட்டாள். அப்படி இருக்கும் போது இப்போது அவன் அண்ணனோடு யுத்தம் செய்யும் புருஷத்துவம் எப்படி வந்தது?

2. அனுமன் அங்கதன் போன்றவர்களே அசகாய வீரர்களாக இருக்கும் போது, இராமலட்சுமணர்களுடன் எவ்விதம் யுத்தம் செய்து மீள்வீர்கள்? காவலர்களைக் கொன்று அசோகவனத்தை அழித்து, உம் பார்வையிலே அட்சயகுமாரனைக் கொன்ற அனுமனை மறக்க முடியுமா? இலங்கைக்கு ஒருவன் நெருப்பு வைக்க முடியுமா? அப் போதெல்லாம் தங்கள் கர்வம், பலம் எங்கு சென்றிருந் தன? இப்போதும் அங்கதன் பிரகஸ்தனைக் கொன்று விட்டானே!

3. வீணாகத் தற்பெருமை கொள்ளாதீர். இராம னின் பாணப் பிரயோகப் பிரபாவங்களை நன்கு அறிந்த வன் மாரீசன். அவன் அதை உமக்குச்சொல்வதற்காகவே உயிருடன் விடப்பட்டிருந்தான். அவன் கூறிய வார்த்தை களை மறந்து விட்டீர்களா?

4. இந்த ராமன், ஜனகனுடைய இராஜசபையில் சிவதனுஸை ஒடித்து சீதையை மணந்து கொண்ட போது தாங்களும் அங்கிருந்தீர்கள். அப்போது தாங்கள் வீரத்தைக் காட்டி அவருடன் போர் செய்து ஏன் வெற்றி அடையவில்லை?

5. இந்திரன் புத்திரனான ஜயந்தன் இராமனுடைய பலத்தை நன்கு அறிந்தவன். அவன் இராமனால் பீடிக்கப் பட்டு, பெரும் அபசாரம் செய்தும் சரண் அடைந்ததால் தன்னுடைய ஒரு கண்ணையிழந்து உயிரை மீட்டுக் கொண்டான்.

6. உம்முடைய தங்கை, சூர்ப்பநகை அடைந்த கதி உமக்குத் தெரியும். உமக்குச் சமமான பலசாலிகளான கரன், தூஷணன், திரிசரஸ் முதலியோரை இராமன் விளையாட்டாகக் கொன்றிருக்கிறான். அது போல் கபந்தனையும், விராதனையும் வெட்டித் தள்ளி விட்டனர். ஒரே பாணத்தினால் வாலியும் உயிரிழந்திருக்கிறான். இப் போதாவது சீதா இராமனை யார் என்று அறிந்து கொள்ளும்.

துளசிதாசர் தனது இராம சரிதத்தில், இலங்கா காண்டத்தில் ஸ்ரீராமனுடைய பரத்வகுணங்களனைத்தை யும் அழகுபட, மண்டோதரி வாயிலாக இங்ஙனம் தொகுத்துக் கூறுகிறார்.

---

# இராமன் பட்டாபிஷேகமும் இராம இராஜ்ஜியமும்

---

இராமன் இராவண வதம் முடித்து இலங்கையி லிருந்து பிராட்டியுடன் இலக்குவன், நளன், சீலன். ஜாம்பவான், அநுமன், அங்கதன், வீடணன், சுக்கிரீவன் முதலியோர்களோடும், வழியில் குகன் முதலானவரோடும் புஷ்பக விமானத்தில் அயோத்தி வந்திறங்கினர். அவர்களைப் பரதன் முதலானோர் வசிஷ்டர் மந்திரி, பிரதானிகளுடன் நகர வாசலில் சென்று வரவேற்று அழைத்துச் சென்றனர்.

அயோத்தி நகரம் பார்க்கப் பதினாயிரம் கண்கள் தேவையென்னும்படி, கோலாகலமாக அழகு செய்யப்பட்டி ருந்தது. மக்கள் எல்லோரும் அந்தப் பட்டணத்தில் பிறந்த பெருமையை உணர்ந்து ஆனந்தித்தார்கள். பிரபு சீதாராமன் முதலாவது மித்திரர்களை அலங்கரிக்கச் செய்தார். கருணாநிதியாகிய இராமன் பரதனை அழைத்துத் தனது திருக்கரங்களால் அவன் ஜடாமண்டலத்தை அவிழ்த்து, அவனுக்கு மங்களா ஸ்நானம் செய்வித்தார் விசிஷ்ட மகரிஷி முன்பு நிறைவேற்றப் படாதிருந்த தனது ஆசையைத் தீர்த்துக் கொள்ள ஆசைப்பட்டார் அவர் வேத மந்திரத்துடனும் பூஜா திரவியத்துடனும் திவ்வியமான இராஜ சிம்மாசனத்தைக் கொண்டு வரச் சொல்லி எல்லோரையும் நமஸ்கரித்து மங்கள ஆசிர்வாதம் செய்து, இடப் பக்கத்தில் அதி சோபிதையாக ஜானகி, விளங்க இராமனுக்கு இராஜ திலகத்தை அணிவித்தார்.

இந்த வைபவத்தை மகேஸ்வரர் உமையுடன் வந்து ஆனந்தத் துதி செய்தார். ஜனகாதி முனிவர்களும் நாரதர் போன்றவர்களும் வந்து இராமனை ஜோதி ரூபமாகக் கண்டு ஆனந்தித்தார்கள். நான்கு வேதங்களும் பிராமண வடிவத்தில் வந்து துதி செய்தன.

இப்படியாக ஆறு மாதங்கள் சென்ற பின், எல்லோருக்கும் அவரவர் தகுதிக் கேற்பப் பரிசுகள் வழங்கிக் கௌரவித்து அனுப்பப்பட்டார்கள். இராமன் அங்கதனுக்கு விசேடமான இரத்தின மாலை என்று கொடுத்து வாரியணைத்து,எப்பொழுதும்வந்து போயிருக்குமாறு வாக்குக் கொடுத்து அனுப்பி வைத்தார். ஆஞ்சநேயர் மட்டும் அயோத்தியிலேயே இராமனைப் பிரியாது இருந்து கொண்டார்.

---

## இராம இராஜ்ஜியம்

இராமச்சந்திரன் பட்டாபிஷேகத்தால் மூன்று லோகங்களும் சந்தோஷம் அடைந்தன. சகல சராசரங்களுக்கும் பயம் என்பதே கிடையாது. ஜீவன்கள் ஒன்றுக்கொன்று விரோதம் பாராட்டவில்லை. சீதாராமன் பிரதாபத்தால் தர்ம வழிகள் காப்பாற்றப்பட்டு, கொடும் செய்கைகள் அனைத்தும் அழிந்து போயின. அயோத்தி வாசிகள் அனைவரும் வைகுண்டத்திற்குத் தகுதியாக விளங்கினுர்கள். அந்த நாட்டில் அகால மரணம் கிடையாது. குழந்தைகள் சாவு இல்லை. அங்கு விதவைகள் இல்லை. யாருக்கும் எவ்வித வியாதியும் கிடையாது. எல்லா ஜீவன்களும் சந்தோஷமாகவும் சகல சம்பந்துகளுடன் காணப்பட்டன. புருஷர்கள் அனைவரும் ஏக பத்தினி விரதர்களாக இருந்தனர்.

சத்துருக்கள் பயம் இல்லை. ஆடும், புலியும் ஆனந்தமாக ஒன்று கூடி ஒரே நீர்த்துறையில் நீர் அருந்தின விருட்சங்கள் பூக்களையும் பழங்களையும் சுமந்து கொண்டிருந்தன. செடி கொடிகள் மதுவைப் பொழிந்து கொண்டு, பறவைகளுக்கும், மனிதர்களுக்கும் ஆனந்தத்தைக் கொடுத்தன. பூமியில் அதிகமான விளைச்சலூட்ட நிதானமான வெப்பமும், மழையும் இருந்தன. நாடெங்கும் மதுரமான குரல்களும் வேதகானமும் ஒலித்தன, மலைகள் மணிகளையும், நதிகள் ஜலப் பிரவாகங்களையும் கொடுத்துக் கொண்டிருந்தன. சமுத்திரங்கள் மரியாதையில் அடங்கியிருந்தன. அலைகள் முத்துக்களையும், தடாகங்கள் தாமரைப் புஷ்பங்களையும் கொடுத்துக் கொண்டிருந்தன. மகா லெக்ஷிமியான சீதை இராமனுக்குக் கைங்கரியங்கள் செய்து வந்தாள். மூன்று சகோதரர்களும் இராமா, சீதா சரணங்களில் உத்தம பக்தி செலுத்தி வந்தனர். இந்தச் சிறப்புகள் யாவும் விவிலியத்தில் எசேக்கிய தீர்க்கதர்சி பரலோக இராஜ்ஜிய மகிமையை வர்ணிப்பதாக இருக்கிறது.

இப்பேர்ப்பட்ட இராம இராஜ்ஜியத்தில் ஹரி பகவான் அம்சமான இராமனுக்கு உத்தம இலட்சணங்களுடன் கூடிய லவன், குசன் என்ற இரு புத்திரர்கள் அயோத்தியில் பிறந்தார்கள். அங்ஙனமே பரதன், இலக்குவன், சத்துருக்கனன் ஆகியோர்களுக்கும் இராஜ இலட்சணங்களுடன் கூடிய அழகான புதல்வர்கள் பிறந்தார்கள்.

பிறப்பு, இறப்பு இல்லாத சனாதனரான ஸ்ரீமன் நாராயணர் ஔளவு யாவரும் அறிந்து கொள்ளும் வகையில் மானிடராக அவதாரமெடுத்து அன்றாட கர்ம அனுஷ்டானங்களைத் தன் சகோதரர்களுடன் செய்து

வந்தார். சரயூ நதியில் ஸ்நானம் செய்தார். பிராமணர்களை நமஸ்கரித்தார். வசிட்டரிடம் புராணங்களைக் கூறும்படிக் கேட்டார். விவேக புத்தியுள்ள அனுமான் தன்னுடைய பக்திப் பிரேமையை, சங்கீத சாஸ்திரத்தின் மாம ஞானத்தின் மூலம் நெஞ்சுருகப் பாடி வெளிப்படுத்திக் கொண்டிருந்தார். அயோத்தியாபுரி வாசிகள் அனைவரும் சீதாராம தரிசனத்தைப் பிரத்தியட்சமாக அனுபவித்துக் கொண்டிருந்தார்கள். பரம ஆனந்தத்தைக் கொடுக்கும் இராம பட்டாபிஷேகம் லோக க்ஷேமத்திற்காகக் கைகேயியினால் 14 வருடங்களுக்குத் தடை செய்யப்பட்டு விட்டது. எண்ணிறந்த கஷ்டங்களுக்குப் பிறகு இராம பட்டாபிஷேகம் நடந்து, இராமனுடைய ஆட்சி நடைபெற்றது.

இராமன், சக்ரவர்த்தியாக அயோத்தியின் ஆட்சிப் பொறுப்பிலிருப்பதால், நாட்டு மக்களின் எண்ணங்களை அனுசரித்தே ஆட்சி நடத்தினர் என்றும்; எவ்வித சந்தேகத்துக்கும் இடமில்லாமல் இராம இராஜ்ஜியம் நடந்ததென்பதையும், நமக்கு அறிவிப்பதற்காக வான்மீகி மகரிஷி தனது உத்தர காண்டத்தில் ஒரு நிகழ்ச்சியைக் கூறுகிறுர். அதாவது, நகர்க் காவலுக்குச் சென்ற ஒற்றர்களில் ஒருவன் இராமனிடம் வந்து, இராவணன் சீதையைத் தூக்கி எடுத்து மடியில் வைத்துக் கொண்டு போனுன். அவனுடைய வசத்தில் பத்து மாதங்கள் இருந்த சீதையை இப்போது இராமன் சேர்த்துக்கொண்டு வாழ்கிருன். இப்படி நாமும் நடக்க வேண்டுமா? என்று குடிமக்கள் பேசுவதாகக் கூறினுன். இதனுல் இராமன் ஆணைப்படி, வயிறு வாய்த்திருந்த பிராட்டியை இலக்குவன் மூலம் காரணம் கூருமல், கானகத்தில் வால்மீகி ஆஸ்ரமத் தருகில் கொண்டு விடவும், அங்கு மகரிஷி இலவ, குசர்களை வளர்த்து வித்தைகளைக் கற்பிக்கவும்,

அக் குழந்தைகளே அஸ்வமேத யாகத்தினிறுதியில் அயோத்தி இராஜ சபைக்கு வந்து, இராம கதையைக் கானம் செய்யவும் இராமபிரான் அத்திவ்வியமான கதையை மனமுருகக் கேட்டு ஆனந்தித்ததாகவும் உள்ள அனைத்து நிகழ்ச்சிகளையும், துளசிதாசர் தனது இராம கதையில் விட்டு விட்டார்.

சிறைவாசத்திற்குப் பிறகு சீதாப் பிராட்டியின் பௌத்திரமான கற்பைக் கனல் மூட்டிப் புடம் வைத்துச் சோதனை செய்து நிரூபித்தாகி விட்டது. அதன் பின்பும் இராம இராஜ்ஜியத்தில் லோக மாதாவாகிய சீதைக்கு எவ்வித சோதனை வருவதும் நியாயமில்லை என்று கருதுகிறார் பக்த துளசிதாசர்.

---

## இராமன் பரதனுக்கு வைணவ தர்மத்தை உபதேசித்தல்

---

(உத்தர காண்டம் செய்யுள் 230 முதல் 288 வரை)

ஸ்ரீ இராமன் பட்டாபிஷேகம் செய்து கொண்டு, அயோத்தியின் ஆட்சிப் பொறுப்பேற்ற போது, பார்வதி, பரமேஸ்வரர்களும், சனகாதி முனிவர்களும் வந்து துதி செய்து அவரவர் நாட்டுக்குச் சென்றார்கள், மற்றவர்கள் இராமபிரானுடைய வசனங்களைக் கேட்க ஆவலோடு எதிர் பார்த்துக் கொண்டிருந்தார்கள். வசிஷ்டர் முதலிய முனிவர்களுக்கும், பிராமணர்களுக்கும் இராமன் அன்பு மரியாதைகளைச் செய்த பின்பு ஹனுமார், இராமனிடம் பரதனின் சங்கோசத்தைத் தெரிவித்தார்.

அப்போது இராமன் பரதனை அழைத்து "நீயே நான்," "நானே நீ" நம்மிருவர்க்கும் வித்தியாசம் கிடையாது என்று கூறி மகிழ்வித்து, சாது ஜனங்களின் பெருமைகளையும் வைணவ தாசர்களின் இலட்சணாங்களையும் உபதேசிக்கலானார்.

சாதுக்கள் சந்தன மரம் போன்றவர்கள். துஷ்டர்கள் கோடரி போன்றவர்கள். 'சந்தன மரத்தைக் கோடரி வெட்டிப் பிளந்தாலும் தன்னுடைய வாசனையைக் கோடரிக்கும் கொடுக்கும். சந்தனம் தேவதைகளின் தலைமேல் உட்காரும். ஆனால் கோடரிகளோ நெருப்பினால் சுடப்பட்டு சுத்தியலால் அடிக்கப்படும். ஆதலால், சாதுகளின் சீலம், இந்திரிய அடக்கம், பிற நற்பண்புகள் எல்லாம் மிகவும் மதிக்கத்தக்கன. அப்பேர்ப்பட்ட சாதுக்கள், பரமாத்மாவின் மெல்லிய பாதங்களை வருடும் சீதையை விட மிக மென்மையான இருதயமுடையவர்கள். என்னுடைய நாம ஜபமும், பிராட்டியின் பாத சரணங்களுமே அவர்களின் சிந்தனை. அவர்கள் ஒரு போதும் கடினமான வார்த்தைகளைச் சொல்லமாட்டார்கள். அவர்களை நிந்தனை செய்தாலும், வந்தனை செய்தாலும் அவர்களுடைய சுபாவம் மாறாது. நான் சதா அவர்களிடம் வசிக்கிறேன். "அவர்களே, நான் வாசம் செய்யும் கோவில்."

"நீசனே!" என்று ஒருவன் நிந்தித்தால், 'அடியேனுடைய குறைகளை நினைவூட்டியதற்கு நன்றி' என்று மகிழ்பவனே வைணவன். அவர்களுடைய மனமும் செயலும் பேச்சுகளும் எப்போதும் தர்மத்தைப் பற்றியதாகவே இருக்கின்றன. அவர்கள் எந்தக் குற்றத்தைச் செய்பவர்களிடத்தும் இரக்கமும், கருணையும் கொண்டவர்களாய் இருப்பார்கள். அவர்கள் தொண்டு முழுவதும், சமுதாயத்திற்கேயன்றி தங்களுக்காக ஏற்பட்டனவல்ல.

துஷ்டர்கள் அவர்களுக்கு நேர் விரோதமானவர் கள். அவர்கள் மயிலைப் போன்று அழகாக இருந்தாலும், அவர்களுடைய நெஞ்சு கொடிய நஞ்சுடைய பாம்பையும் விழுங்கும் கடினமுடையது. துஷ்டர்கள், ஈவு இரக்கமில் லாதவர்கள். அவர்களை நம்பக் கூடாது. அவர்கள் பிறரின் துன்பத்தில் சந்தோஷமடைவர். எப்பொழுதும் தங்கள் காரியத்திலேயே ஊக்கமுள்ளவர்கள். விஷய போகங்களில் இச்சையுள்ளவர்கள். கலியுகத்தில் அவர் களுடைய எண்ணிக்கை மிகவும் அதிகம். ஆகவே அவர்களுடைய உறவு கூடாது.

பிறருடைய சுகத்தையும், சேமத்தையும் நாடுவதை விட பெரிய தர்மம் வேறொன்றுமில்லை. பிறருக்குத் தீமை செய்வதை விட பெரிய அதர்மம் வேறொன்றுமில்லை. அதனால் பிறருக்கு எந்தச் சமயத்திலும் இன்னல்களைச் செய்யாதே. இதைத் தான் சகல புராணங்களும், வேதங் களும் பறை சாற்றுகின்றன. இதுவே அவைகளுடைய சாரமான சித்தாந்தம்.

மனிதன் பல புண்ணியங்களைச் செய்து பல பிறப்பு களுக்குப் பிறகு மானிடப் பிறப்பை அடைந்திருக்கிறான். மானிடப் பிறப்பு தேவர்களுக்கும் கிட்டாதபடி மிக்க அரியதாகவிருக்கிறது. அது தவம் செய்யவும், தர்மம் செய்யவும் வாய்ப்புடையது. ஆகவே ஜென்ம மரண சுழல்களில் அகப்பட்டுக் கொண்டு, மனிதன் இனிமேலும் நான்கு வகை யோனிகளில் ஒன்றான பிறப்புகளை அடை யக்கூடாது. நர உடல் கொண்ட ஜீவாத்மா தவத்தினால் தேகத்தை சாதனமாகக் கொண்டு என்னை அடைய வேண்டும். ஒருவன் இந்தச் சரீரத்தில் மோட்சத்தைப் பெற்றுக் கொள்ளாவிடில் அந்த மனிதன் மிகவும் அபாக் கியமுள்ளவனாகிறான்.

ஞான மார்க்கம் பல விதமாக இருக்கிறது. அதை அடையக் கடினமான சாதனங்கள் வேண்டும். அதைச் சித்தி பண்ணுவதும் மிகச் சிரமமாக உள்ளது. ஆதலால் பக்தி மார்க்கமே மிகவும் எளிதானது. அது எல்லா சுகங் களுக்கும் இருப்பிடம். இதன் பெருமை வேதங்களிலும் புராணங்களிலும் விரிவாகப் பேசப்பட்டிருந்தாலும், அது சத் சங்கத்தினுல் மட்டும் அடையக் கூடியது. இதற்கு நியம நிஷ்டைகள் ஜெபதபங்கள் உபவாசம் முதலிய இந்திரிய நிக்ரகம் ஒன்றும் அவசியமில்லை. எவன் நிஷ்காமிய புத்தியுடன் தனது கர்மங்களைச் செய்து கொண்டு மானத்தையும் அவமானத்தையும் சமமாக எண்ணுகிருனே, எவனுக்குத் தன் மனைவி, தன் வீடு, தன் சொத்து என்று சொல்லும் நினைவு இல்லையோ எவன் எந்தப் பெரிய பாவத்தைச் செய்திருந்தாலும் பச்சாதாபத்தினுல் பிரபத்தியோகம் செய்து பகவானுடைய கருணையைத் தேடுகிருனே, அவனே பகவானுக்கு உகந்த உத்தமன். உமையுடன் கூடிய சங்கர பகவானைப் பக்தி செய்து, ஆராதித்து அவருடைய கிருபையை ஒருவன் அடையாவிட்டால், அவன் ஒரு போதும் என்னை அடைய மாட்டான்.

ஆதலால் என்னுடைய கலியாண குணப் பெருக்குகளை எப்போதும் கீர்த்தனம் செய்து ஆத்ம திருப்தியடைந்து. ஆனந்த நிலையை இந்த ஜென்மத் திலே அடையுங்கள் என்று, மிக்க கருணை கொண்டு உபதேசித்தார்.

—

## பறவைகளின் ராஜனுன கருடன் காக்கையிடம் ஞானம் பெறுதல்

---

கருடன் பக்ஷிகணங்களனைத்துக்கும் இராஜா. மகாவிஷ்ணுவின் அந்தரங்க சேவகன். மகாஞானமுடையவன். நைமிசாரண்ய வனத்தில் சஞ்சரிக்கும் ரிஷிகளும் போற்றும் பெருமை வாய்ந்த கருடாழ்வார், இழிந்த ஜாதிப்பறவையாகிய காக்கை முன் அமர்ந்து ஞானம் பெற்ற வரலாற்றைப் பரமேசுவரனுன ஜம்பு, பார்வதி தேவிக்குக் கூறும் பான்மையில் துளசிதாசர் தனது உத்தர காண்டத்தில், இராம பக்தியின் மகிமையை வெளிப்படுத்துகிருர்.

தட்சன், யாகத்தில் செய்த பெரும் பிழையை நினைத்து தட்சன் மகளும், பரமேஸ்வரனின் தேவியுமான சசிதேவி அந்த யாகத்தில் விழுந்து இறந்தாள். ஜம்பு பகவானின் தேவகணங்கள் சென்று அந்த யாகத்தை அழித்து தட்சனையும் கொன்று விட்டார்கள். சசிதேவி யிடம் கொண்ட பிரியாத காதலினுல் ஜம்பு பகவான உத்தர மேருவுக்குச் சென்று தவம் செய்து கொண்டிருந் தார். அங்கே அரச மரத்தடியில் அழகான குளம் ஒன்று இருந்தது. குளம் நிரம்ப இனிய நீரும் பல வண்ணப் பூக்களும் நிறைந்து காணப்பட்டன, அங்கு அன்னப் பறவைகள் தேனினும் இனிய குரலில் உலவி, உரையாடி மகிழ்ந்தன. அழகிய வண்டுகள் ரீங்காரம் செய்தன.

இத்தகு இயற்கைச் சூழ்நிலையின் நடுவிலமைந்த சிறு மலை ஒன்றில் காகப்பு சுண்டி என்ற காகம் ஓர் அரச மரத்தின் கீழ் ஆசிரமம் அமைத்து ஜெபம், தியானம்,

வழிபாடு, ஹரிகதா காலட்சேபம் முதலியன செய்து வந்தது. பல பறவைகள் வந்து, அது கூறும் இராம கதை யமுதைக் கருத்துடன் கேட்டு மகிழ்ந்தன. அப்போது அன்னப் பறவை உருக் கொண்டு தாமும் அதைக் கேட்டதாகப் பரமேஸ்வரன் கூறுகிறார்.

கருடன், ஏன் இந்தக் காக்கையிடம் சென்று இந்த இதிகாசத்தைக் கேட்டார் என்பதற்கான காரணத்தையும் சிவன் உமைக்குச் சொன்னார்.

இராமன் சீதா பிராட்டியை மீட்டு வரப் பெரும் போர் செய்ய நேர்ந்தது. இந்திரசித்துடன் போர் செய்யும் போது இராமர் தன் இச்சைப்படி நாக பாணத்தினால் கட்டுண்டார். அப்போது நாரத மகரிஷி கருடனிடம் வந்து, அவனை யுத்தக் களத்திற்கு அனுப்பினார். கருடவரசர் வந்து இராமனையும் இலட்சுமணனையும் நாகபாசத்திலிருந்து விடுவித்தார். இந்த நிகழ்ச்சியால் கருடனுக்கு விஷம் போல ஒரு சந்தேகம் எழுந்து இருதயத்தை வாட்டியது.

சர்வேஸ்வரனான இராமன், தனது பரத்வத்தை மறந்து எப்படி சர்ப்பங்களால் பீடிக்கப்பட்டார்? என்பதை நினைத்துப் பார்க்கவே கருடருக்குப் பெரிய கவலை ஏற்பட்டு, மயக்கம் உண்டாயிற்று. எல்லோரது பாவங்களையும் எரித்தழிக்கும் பரம் பொருளாகிய இராமன் எங்ஙனம் இத்துன்பத்துக்கு ஆளானார்? இந்த அரக்கர்களின் நாகக்கணைகள் எவ்வாறு அவரைப் பீடித்தன? பரமாத்மாவான இராமனுக்கு இந்த நாகபாசங்கள் மிகவும் துச்சமானவைகளல்லவா? இப்படி ஏற்பட்ட, தன் சந்தேகங்களைப் போக்கிக் கொள்ள முடியாமல் திகைத்து நாரதரிஷியிடம் இவற்றைத் தெரிவித்தார். நாரதர் மிகவும்

இரக்கப்பட்டு, "என்னைப் போன்ற பரம ஞானிகளுக்கும், சித்தர்களுக்கும், ஜீவன் முக்தர்களுக்கும், இப்படிப்பட்ட சந்தேகங்கள் பல தடவை ஏற்பட்டிருக்கின்றன. இந்தச் சந்தேகத்தை என்னால் தீர்க்க இயலாது. நீ பிரம்ம லோகம் சென்று பிரம்மாவிடம் கேள். அவர் உன் ஐயங்களை நீக்குவார்" என்று கூறினார்.

கருடன் பிரம்மாவிடம் சென்று தன்னுடைய சந்தேகங்களைக் கேட்டான். பிரமன் தாமும், இவ்வித மாயையின் அளப்பரிய ஆற்றல்களில் பல தடவை ஏமாந்திருப்பதாகவும் உலகையே படைத்த தமக்கும், இவ்வித சந்தேகங்கள் ஏற்பட்டிருப்பதாகவும் கூறினார். மேலும் "சங்காரநாயகனாகிய சிவபெருமானுக்குத்தான், இராமனுடைய பராத்துவங்கள் நன்றாகத் தெரியும். அவரிடம் சென்று கேட்டுக்கொள்" என்றார். கருடனும் அப்படியே பகவான் சங்கரரிடம் வந்து சேர்ந்தான். அப்போது சிவன், கைலாயத்தில் பிறந்து விளையாடிக்கொண்டிருந்த உமையை நோக்கிப் போய்க்கொண்டிருந்தார். கருடர் தன் சந்தேகங்கள் முழுவதையும் சொன்னார்.

அப்பொழுது பகவான் சங்கரர், "கருடா! நீ என்னை வழி நடுவில் சந்தித்துக் கேட்கிறாய். இப்பேர்ப்பட்ட பெரிய சந்தேகங்கள் சாதுக்களின் சங்கத்தை அடைந்து பல காலம் அவர்களுடன் பழகினால்தான் தெளிவடையும்.

மேலும் ஹரிபகவான் கீர்த்திகளை, முனிவர்கள் பலவிதமாக அறிந்து மகிழ்கிறார்கள். ஆதலால் நான் உன்னை ஓர் இடத்துக்கு அனுப்புகிறேன். அங்கு நாள் தோறும் இராம கதையமுதம் வழங்கப்படுகிறது. அங்கு நீ சென்று ஹரியமுதைப் பருகி வா. உனக்கு எல்லா மங்களங்களும் உண்டாகும்.

சுமேருவுக்கு வடக்கே நீலகிரிப் பருவதம் ஒன்று இருக்கிறது. அங்கு காகப்பு சுண்டி என்ற காக்கை மிக நெடுங்காலமாக வாழ்ந்து வருகிறது. அது இராம பக்தியில் தலை சிறந்தது,

அது ஓர் அரச மரத்தினடியில் ஆஸ்ரமம் அமைத்துத் தினந்தோறும் இராமாயணம் பிரவசனம் செய்து வருகிறது. அந்தச் சங்கத்தில், பல வகையான பறவைகளும் மிருகங்களும் வந்து மிக்க சிரத்தையோடு இராம கதாம்ருதத்தைப் பருகுகின்றன. அது கூறும் இராம கதையை நீயும் அங்கு சென்று கேள். யாராலும் தீர்க்க முடியாத சந்தேகங்கள் அங்கு நீங்கி விடும் என்றார். கருடனும் வணங்கி விடை பெற்று அகன்றது.

கருடருக்கு சிவபெருமான் உபதேசம் செய்யாமல் அனுப்பியதற்குக் காரணமென்ன? என்ற கேள்வி எழுகிறது. (அ) ஒரு பறவை மற்றொரு பறவையினால் தான் விஷயங்களை நன்றாகத் தெரிந்து கொள்ள முடியும். (ஆ) மேலும் கருடன் இராமனுக்கு ஏதாவது அபசாரம் செய்திருக்கக் கூடும். இதனால் இவனுக்குப் புத்தி புகட்டுவதற்கு ஏதாவது நினைத்து இருக்கலாம். அதனால் தான் கருடனுடைய சந்தேகங்களைப் பகவான் தானே விளக்காமல் விட்டிருக்கிறார்.

திரிபுவான பதியாகிய பட்சிராஜன் நாராயணனுடைய மாயா லீலைகளைப் புரிந்து கொள்ளாமல் இருக்கும் போது சாதாரண மனிதர் எம்மாத்திரம்? கருடன் காகப்புசுண்டி இருந்த இடத்திற்கு வந்து காகப்புசுண்டியைத் தரிசனம் செய்தான், அங்கே இருந்த தடாகத்தில் நீராடி, அன்றன்றுள்ள இறை வழிபாட்டுக் கடமைகளை முடித்துத் தூய உள்ளத்துடன் அரச மரத்துக்குச் செல்

வான். அங்கு வரும் மிக்க வயதுள்ள பறவைகளும், பிற பறவைக் கூட்டங்களும், பறவை இனத்திற்கே சக்கர வர்த்தியாக விளங்கும் பட்சி ராஜனைக் கண்டதும் அவரை மிக்க மரியாதையுடன் இன்மொழி கூறி வரவேற்றன.

கருடனுக்கு நல்ல ஆசனம் கொடுக்கப்பட்டது. பின்பு கருடரிடம் காகப்புசுண்டி தாங்கள் என்ன காரியத் திற்காக இவ்விதம் எழுந்தருளினீர்கள்? என்று கேட்டதும், கருடர், "உமா மகேஸ்வரர்களால் புகழும்படியான உத்தம ஸ்தானத்தைத் தாங்கள் அடைந்திருக்கிறீர்கள். ஆகவே நான் தங்களைத்தரிசிக்க வந்தேன், 'தங்களுடைய பரம பாவனமான ஆசிரமத்தைக் கண்டதுமே என்னுடைய மோகங்களும், சந்தேகங்களும் மறைந்து விட்டன. இராமச் சந்திரருடைய கதையைக் கருணை கூர்ந்து ஆரம்பத்திலிருந்தே அடியேனுக்குச் சொல்ல வேண்டும்" என்றார்.

முதலாவதாக இராம சரித மானஸரோவரின் ஐஸ்வரியத்தை விவரிக்க ஆரம்பமானார். பின்நாரதர் பகவானுடைய அபாரமான மோகங்களைச் சொன்னார். பின்பு இராமச்சந்திரனுடைய பல அவதாரங்களையும் பால லீலைகளையும், ஒன்று விடாமல் கூறினார்.

காகப்புசுண்டி இராமன் பிறந்தது முதல் இராவண வதம் வரையுள்ள வரலாறுகளை விதிப்படி முழு விவரங் களோடு கருடருக்கு அருள் செய்தார். கடல் போல் அகன்றுள்ள அந்த இராமசரிதம் முழுவதையும் 74 வாக் கியங்களில் துளசிதாசர் அமைத்துள்ளார்.

---

# விஷ்ணு பக்தர்களுக்குச் சோதனை

---

நாரதர், கருடாழ்வார், ஆஞ்சநேயர், ஆகிய மூவரும், ஹரிபகவான் சேவைக்காகவே பிறந்து வாழும் வைணவ நம்பிகள்.

## கதை 1

பிரம்மாவின் புத்திரனான நாரத மகரிஷி, ஹரி பக்தியில் தனக்கு நிகர் தானே என்றும், ஹரி பக்தியில் தனக்கு நிகர் மூன்று உலகிலும் யாருமிலர் என்றும் இறுமாந்திருந்தார். இந்த இறுமாப்பில், பரமேஸ்வரனையும் மதியாமல் நடந்தார். இதை அறிந்த ஹரி பகவான் நாரதரிடம் தனது மாயையை விரித்துக் கொஞ்சம் லீலைகள் புரியலானார்.

அதன்படி முனிவருக்குத் திருமண ஆசை மேலிட்டு சிந்தையழிந்து, செயல் கெட்டு அலைந்தார். பின்பு ஹரியையே சரண் அடைந்து, தெளிவு பெற்று உய்ந்தார். இவ்வாறு அகந்தையில் சிதைந்து பின்பு அறிவு பெற்று உய்ந்த வரலாற்றை, "நாரதரின் சாபம்" என்ற முன் கதையால் தெரிந்து கொள்ளவும்.

## கருடாழ்வார்

## கதை 2

பட்சிகளின் இராஜனான கருடர் பரம ஹரி பக்தர். இவர் ஹரிபகவானின் வாகனமாக இருக்கிறார். பகவானின் மனோவேகத்தை அறிந்து, சேவை சாதிக்கும்

பக்தன். இவருக்கு ஒரு சமயம் மனதில் கொஞ்சம் பிரேமை ஏற்பட்டுத் தன்னுடைய வல்லமையில் கர்வம் உண்டாகி விட்டது.

திருமாலாகிய ஹரி, பூலோகத்தில் இராமனாக அவதாரம் எடுத்தார். அது சமயம் துஷ்டனான இராவணன் சீதையைத் தூக்கிக் கொண்டு போய் மறைத்து விட்டான். இராமன் தனது சகாக்களுடன் சைன்னியத்தோடு சென்று இராவணனோடு யுத்தம் செய்ய நேரிட்டது. அந்த யுத்தத்தில் இராவணன் மகன் இந்திரசித்தினுடைய நாக பாசக் கணையினால், இராமனும் மற்றுமுள்ளோரும் பிடிக்கப்பட்டு, யுத்தக் களத்தில் வீழ்ந்து கிடந்தார்கள். அப்போது கருடாழ்வாரை நாரதர், யுத்தக் களத்திற்கு அனுப்பினார். கருடர் வந்து சேர்ந்ததும் நாக பாசக் கணையின் வலிமை ஒழிந்து இராமன் முதலானோர் எழுந்து சென்றனர்.

இதனால் கருடருக்குத் தன்னுடைய ஆற்றல் மீது அதிகமான நம்பிக்கையும், பகவானின் ஆற்றல் மீது சிறிது சந்தேகமும் ஏற்பட்டன.

இந்தக் கர்வம் எப்படிப் பங்கம் அடைந்தது? என்பதைக் கடைசிக் கதை மூலம் தெரிந்து கொள்ளவும்.

## ஆஞ்சநேயர் கர்வம்

### கதை 3

இந்தக் கதை துளசிதாசருடைய இராம சரித மானசத்தில் கூறப்படவில்லை. ஆனாலும், துளசிதாசர் தனது உத்திர காண்டத்தில் இராம இராஜ்ஜியத்தின் மகிமைகளைக் கூறுகிற இடத்தில் ஆஞ்சநேயரின் இசை ஞானம் பேசப்படுகிறது.

இராமன் தனது சகோதரர்களுடன் மாலை வேளையில் அயோத்தி நகரை விட்டு வெளியே சென்று, சரயு நதிக்கரையில் உலாவி வரும் போது, ஆஞ்சநேயர் தன்னுடைய இசை ஞானத்தின் மர்மங்களால் இராமனையும், மற்றுமுள்ள மித்திரர்களையும் மகிழ்வித்து வந்தார் என்று குறிப்பிடுகின்றார்.

வைணவ நம்பியாகிய ஆஞ்சநேயரின் சிறப்பு, பல வகையாகப் புகழ்ந்து பேசப்படுகிறது. இவ்வளவு மகிமையுள்ளவர், எவ்வாறு சங்கீத ஞானத்தில் "தன்னை விடச் சிறந்தவர் யாருமிலர்" என்ற இறுமாப்பைக் கொண்டார் என்பதைப், பின் வரும் இதிகாசக் கதை தெரிவிக்கிறது.

இசை ஞானத்தில் ஈடு இணையற்று விளங்கியவர் நாரதர். அவருக்கும் தும்புரு என்பவருக்கும் "இசையில் யார் வல்லவர்?" என்ற போட்டி ஏற்பட்டது. இசையில் வல்லவரான ஆஞ்சநேயரிடம் சென்று தங்கள் வழக்கைக் கூறி, தீர்ப்பளிக்குமாறு வேண்டினார்கள். ஆஞ்சநேயர் சிந்தித்து ஒப்புக் கொண்டார்; தானே பாடத் தொடங்கினார்.

பக்கத்தில் இருந்த ஒரு குன்று அவர் பாட்டைக் கேட்டு இளகி, மெழுகைப் போல் தேங்கி நின்றது. அவருடைய பாட்டு நிறைவுடன் குன்று முன்னைப் போலவே இறுகி நின்றது.

பிறகு இருவரையும் நோக்கி "உங்கள் இருவரில் யார் இந்த மலையை மீண்டும் உருக வைக்கும்படிப் பாடுகிறீர்களோ அவரே இசையில் வல்லவர்" என்று ஆஞ்சநேயர் கூறினார்.

நாரதரோ தயக்கத்தோடு பாடத் தொடங்கினர். பல நாழிகைகளும், பல நாட்களும் ஆயின. மலை சிறிதும் நெகிழவே இல்லை.

பிறகு தும்புருவும் பாடினர். மலை எந்த மாற்றமும் பெறாமல் அப்படியே இருந்தது.

"இசையில் தம்மை வெல்பவர் எவருமிலர்?" என்று இறுமாந்து போட்டியில் ஈடுபட்ட இருவரும் வெட்கத்துடன் பேச்சு மூச்சின்றித் திரும்பினர்.

விவரம் தெரிந்தவர்களோ ஆஞ்சநேயர் என்ன தீர்ப்பு வழங்கினர்? என்று வினவினர்.

உலகத்தையே மயங்க வைக்கும் ஆஞ்சநேயரின் இசையின் முன்னர், நாங்கள் மலைக்கும் மடுவுக்கும் உள்ள நிலைமையே என்று வியந்து கூறினர்.

ஆஞ்சநேயர், கல்லும் கனிந்துருகப் பாடும் திறமை பெற்றவர் என்ற பெயர், உலகில் பரவிற்று. இதைக் கேள்வியுற்ற ஆஞ்சநேயருக்குச் சற்று கர்வம் ஏற்பட்டது. தான் இசையுலகில் முக்கியப் புள்ளி என்ற எண்ணம் அவர் மனதில் தோன்றிற்று.

இராமபிரான் இராவணனைக் கொன்ற பின், அயோத்திக்குத் தன் தம்பி இலக்குவனுடன் திரும்பினர். ஆஞ்சநேயரும் இராமனின் திருவடிகளில் பணிபுரிவதையே உயர்வாகக் கருதி அவரோடேயே தங்கி விட்டார்.

அப்போது இராமபிரான், அண்மைக் காலத்தில் ஆஞ்சநேயரிடம் ஏற்பட்டுள்ள இந்த சிறு மாறுபாட்டை அறிந்தார்.

ஒரு நாள் இருவரும் உலாவுவதற்காகக் காட்டு வழியாகப் போய்க் கொண்டிருந்தார்கள். அப்போது அங்கு, சிறிது தூரத்தில் ஒரு முனிவர் ஆசிரமம் தென் பட்டது; இருவரும் அங்கே சென்றனர். அங்கே வசித்து வந்த முனிவர் இசைக்கலையைத் தன உயிராகக் கொண்டு அதைத் தன் வசப்படுத்திக் கொண்ட மாமேதையாவார்.

கலைமகள் அவர் முன் தோன்றி. ச. ரி. க. ம. ப. த. நி. என்ற ஏழு சுரங்களையும் அவருக்கு, 'ஏழு பெண் குழந்தைகளாகக் கொடுக்கிறேன்' என்று வரம் கொடுத் தாள். அதன் பயனாய் சட்சம், ரிசபம், காந்தாரம், மத்தியமம், பஞ்சமம், தைவதம், நிசாதம், என்ற ஏழு குழந்தைகளும் அம்முனிவரைத் தந்தையாக ஏற்று அவருக்குப் பணிவிடை செய்து வந்தனர்.

இராமபிரான் அம் முனிவரைப் பற்றியோ, அவர் களுடைய பெண்களைப் பற்றியோ, ஆஞ்சநேயரிடம் ஒன்றும் கூறவில்லை. அவ்வாசிரமத்தை அடுத்த குளக் கரையில் அமர்ந்தனர் இராமன் ஆஞ்சநேயரைப் பார்த்து, 'நீதான் இசையில் வல்லவனாயிற்றே! மகிழ்ச்சிக் காக ஏதாவது பாடேன்' என்றார்.

ஆஞ்சநேயரோ, 'பாட்டு தானே' என்று பாடத் தொடங்கினார்.

'தான் எப்படிப் பாடினாலும் அது காதுகளுக்கு இனிமையாகத் தான் இருக்கும்' என்று இறுமாப்புடன் பாடினார். கர்வம் ஏற ஏற, இசையில் கவனம் குறைந்தது பாட்டில் சட்சத்தில் அபசுரம் ஏற்பட்டது, காது. கொடுத்து கேட்க முடியவில்லை.

அந்நேரத்தில் எழு கன்னியரும் நீர் முகக்க அந்தக் குளத்துக்கு வந்தனர். அப்போது சட்ச சுரத்திற்கு உரிமையானவள், அந்த இசையைக் கேட்டுத் தாங்க முடியாமல் விழ்ந்தாள். உயிர் போய் விட்டது.

மற்றப் பெண்கள் அறுவரும், அவளது உடலைச் சூழ்ந்து கொண்டு, அழுது புலம்பத் தொடங்கினார்கள். இந்த அழுகைக் குரலைக் கேட்டு, முனிவர் விரைந்து வந்தார்.

ஆஞ்சநேயரோ, இதெல்லாம் தம்மால்தான் ஏற்பட்டதென அறியாமலேயே, தொடர்ந்து பிழையாகவே பாடிக் கொண்டிருந்தார்.

முனிவரோ கோபத்துடன் ஆஞ்சநேயரை அணுகி, "ஓய் யாரையா நீர்? உம் அபசுரத்தால் என் மகள் "சட்சத்தை"க் கொன்று விட்டீரே!" என்று பேசி அவர் வைத்து இருந்த வீணையைப் பிடுங்கிக்கொண்டார்.

இராமபிரானே, "அடிகளே! இவன் இவ்வாறு நடந்து கொண்டதிலிருந்தே இவன் இசையில் பயிற்சி குறைந்தவன் என்பது புலப்படவில்லையா? அறியாமல் செய்த பிழையை மன்னித்து விடுங்கள்" என வேண்டினார்.

முனிவரும் அமைதியடைந்து, ஆஞ்சநேயர் பாடிய அதே இராகத்தையே பிழையின்றிப் பாடித், தன் மகளைத் தூங்கியவள் விழித்தெழுவது போல் எழச் செய்தார்.

நாணத்தினால் உடல் குன்றிய ஆஞ்சநேயர், என்னால் இத்தவறு நேர்ந்து விட்டதே! என்று வருந்தி, அதற்குரிய காரணம் அறிந்து வெட்கப்பட்டு, அகந்தையை விட்டொழித்து அடக்கத்தைக் கைக்கொண்டார்.

---

# இராமாயணம் கூறுவது என்ன?

## வேதங்கள் கூறுகின்ற அறங்களை மக்களுக்கு இனிமையாக எடுத்துக் கூறுவதே இராம சரித்திரம்

---

இரு அரணிக் கட்டைகளுக்குள் சிறு பொறியாய் அடங்கிக் கிடக்கின்ற பெரு நெருப்புப் போல் "ஞானப் பரபோதம்" என்னும் ஜீவாம்ரதம் இராம கதைக்குள் அடங்கிக் கிடக்கின்றது. என்பதைக் "காகப்புசுண்டி" என்ற காகம், கருடாழ்வாருக்கு உபதேசித்ததாகத் துளசி தாசர் கூறுகிறார்.

வேதத்தின் சாரமே "ஓம்" என்னும் பிரணவ மந்திரம்! ஓங்காரத்தின் விளக்கமே காயத்ரி ஜெபம். காயத்திரியின் இருபத்துநான்கு அக்ஷரங்களின் விஸ்தாரப் பொருள் தாம் வான்மீகியின் இருபத்து நான்காயிரம் இராமாயண சுலோகங்கள்.

## இந்த இதிகாசம் மக்களுக்கு உபதேசிக்கும் புருஷார்த்தங்கள்:—

தர்மம், அர்த்தம், காமம், மோட்சம் என்ற நான்கு அறிவுரைகள் விஸ்தாரமாக ஏழு காண்டங்களில் கீழ் கண்ட பிரகாரம் இராமனுடைய கதை மூலமக அறிவிக் கப்படுகின்றன.

1. பிதாவின் கட்டளை நியாயமோ, அநியாயமோ, சாஸ்திர விரோதமில்லாமல் இருந்தால், மக்கள் அதைச் செய்வதே தர்மம் என்று இராமன் மூலம் அறிகிறோம்.

2. சகோதரர்கள் ஒருவருக்கொருவர் காட்ட வேண்டிய அன்பைத் தசரத புத்திரர்கள் நடத்தை மூலமும்,

3. மனைவி, புருஷனை விட்டு எந்தச் சூழ்நிலையிலும் தனியே இருக்கலாகாது என்றும், புருஷனுக்கு எந்தத் துன்பம் நேரிட்டாலும் மனைவி அவனிடமிருந்து அதை அனுபவித்து அவனுக்கு உதவுவதே தர்மம் என்றும் சீதாபிராட்டி இராமனுடன் காட்டுக்குச் சென்றது மூலமும்,

4. இரிஷிகளையும் முனிவர்களையும் காக்கவேண்டியது சத்திரியர்களுக்குக் கடமை என்பதைத் தாடகை, சுபாகு, மாரீசன், விராதன் முதலியவர்களை இராமன் கொன்றதின் மூலமும்,

5. சக்கரவர்த்தியானாலும் இரிஷி முதலிய பெரியோர்களை உபசரிக்க வேண்டியது, சத்திரிய தர்மம் என்பதை வசிஷ்டர், விஸ்வாமித்திரர் மற்றும் தண்டகாரண்ய இரிஷிகள் முதலியோரிடம் இராமன் நடந்து காட்டியதின் மூலமும்,

6. சாதுக்களுக்கும், தர்மங்களுக்கும் கெடுதி செய்கிறவர்கள் எவ்வளவு சக்தியையும், வரப் பலனையுமுடையவர்களாயிருந்தாலும் இறுதியில் நாசமடைவர் என்பதை இராவணாதி ராட்சசர்களை வதம் செய்ததின் மூலமும்,

7. அர்த்தத்தை (பொருளை) விட, தர்மமே மேல் என்பதை இராமன் இராஜ்ஜியத்தை விட்டு காட்டுக்குச் சென்றதின் மூலமும்,

8. அற்ப உதவி செய்தவர்க்கும் பன் மடங்கு உதவிகளைச் செய்ய வேண்டுமென்பதை, ஜடாயுவுக்கு இறுதிக் கிரியைகளைச் செய்து மோட்சம் கொடுத்து, சுக்கிரீவன் விடணன் முதலியோர்க்கு அரசு வழங்கியவற்றின் மூலமும்,

9. நியாய விரோதமாய் இன்பத்தை (காமத்தை) நிறைவேற்ற விரும்பினல் கெடுதலே உண்டாகுமென்பதை;

(அ) தசரதர் கைகேயியிக்கு வசப்பட்டு, மூத்த மகனைக் காட்டுக்கு அனுப்பியதாலும்;

(ஆ) சீதையின் தூண்டுதலால், இராமன் மானைப் பின் தொடர்ந்து, மனைவியை இழந்ததாலும்;

(இ) சகோதரன் மனைவியைக் கவர்ந்ததால் வாலி உயிரிழந்ததாலும்;

(ஈ) சீதையை அபகரித்ததால், தன் வம்சத்தோடு இராவணன் ஒழிந்ததன் மூலமும்;

10. வாழ்க்கையின் இறுதியில், நித்தியானந்த பரகதியை இராம கதாம்ரதம் அளிக்கும் என்பதை இராம இராஜ்ஜிய சுகங்களை கடைசிக் காண்டத்தில் கூறுவதன் மூலமும் நமக்குத் தெரிவிக்கப்படுகின்றன.

"உயர்ந்த எண்ணத்தில் பெரிய பணியைச் சிறியேன் இந்தச் சிறு நூல் மூலம் செய்யத் துணிந்ததில் ஏற்பட்டுள்ள குறைகளை மன்னித்தருளுமாறு தாழ்மையுடன் பிரார்த்திக்கிறேன்!"

"ஸ்ரீ சீதா லெட்சுமண பரத சத்துருக்கன

ஹனுமத்சமேதரான

ஸ்ரீ இராமனுக்கு மங்களம்!"

---

## பிழை திருத்தம்

| பக்க எண் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 16 | 11 | பத்தி | பத்தினி |
| 24 | 26 | என்மதை | என்பதை |
| 26 | 2 | உ வி | உதவி |
| 42 | 28 | தேவமகளிரும் கண்ணயர்ந்து | தேவமகளிரும் அரக்க மகளிரும் கண்ணயர்ந்து |
| 50 | 2 | சீலன் | நீலன் |

ஸ்ரீ கோபாலகிருஷ்ண பிரஸ், திருநெல்வேலி-1.